உ

ஓம்

பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

" எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு "—திருவள்ளுவர்.



தொகுதி 13 | பிரபவ௵ கார்த்திகை௴ ௧௬௳ | 1927௵ நவம்பர்௴ 16௳ | பகுதி 5

## கடவுள் வணக்கம்.

அந்தகா ரத்தையோ ரகமாக்கி மின்போலெ
னறிவைச் சுருக்கி னவரா
ரவ்வறிவு தானுமே பற்றின தூ பற்று
யழுந்தவுந் தலை மீதிலே
சொந்தமா யெழுதப் படித்ததார் மெய்ஞ்ஞான
சுகநிஷ்டை சேராமலே
சோற்றுத் துருத்தியைச் சதமெனவு முண்டுண்டு
தூங்கவைத் தவரார் கொலோ
தந்தைதாய் முதலான வகிலப்ர பஞ்சந்
தனைத்தந்த தெனதா சையோ
தன்னையே நோவனோ பிறரையே நோவனோ
தற்கால மதைநோ வனோ
பந்தமா னதுதந்த வினையையே நோவனோ
பரமார்த்த மேது மறியேன்
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணானந்தமே. (1)

விண்ணாறு வெற்பின் விழுந்தாங் கெனமார்பிற்
கண்ணாறு பாய்ச்சிடுமென் காதல்வெள்ளங் கண்டிலையோ
தண்ணாறு சாந்தபதத் தற்பரமே நால்வேதப்
பண்ணாறு மின்பப் பதியே பராபரமே. (2)

கூடியநின் சீரடியார் கூட்டமென்றோ வாய்க்குமென
வாடியவென் னெஞ்சமுக வாட்டமுநீ கண்டிலையோ
தேடியநின் சீருளைத் திக்கனைத்துங் கைகுவித்துப்
பாடியநான் கண்டாய் பதியே பராபரமே. (3)

# அரும்பொருள் விளக்கம்.

1. இப்பிரபஞ்சத்திற் றோன்றிய சகல வுயிர்களும், நிரந்தரமான சுகப்பேற்றை யடைய வேண்டியிருந்தும், அவ்வா றதனை யடைய முடியாது துக்கசாகரத்திலேயே மூழ்கி வருந்துவதற்குக் காரணம், அவ்வுயிர்களிடத்து நிலைத்துள்ள அஞ்ஞானம் அல்லது அறியாமையேயாம். இவ்வறியாமை யொழிந்தாலன்றி நித்தியானந்தம் சித்தியாது. ஆகவே பிறப்பிற்கு முதற்காரணமான அறியாமை நீங்கவேண்டிய முயற்சியை மேற்கொண்டால், உயிர்கள் சுகப்படும். அவ்வழியைக் காண்பதுவே அந்த உயிர்களுக்குரிய மெய் யறிவாகும்.

“ பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னுஞ்
செம்பொருள் காண்ப தறிவு ”

என்றார் தெய்வப்புலவர்.

அறியாமையோ, செம்பிற் களிம்பும், நெல்லிற் குமியும், நீர்க்கு நுரையும் இயல்பாயிருத்தல் போன்று உயிர்க்கு அநாதியா யிருக்கின்றது. அதுபற்றி ‘ அந்தகாரத்தையோ ரகமாக்கி மின்போலெ னறிவைச் சுருக்கினவரார் ’ என்றார்.

அந்தகாரம்=இருள்; அதாவது அஞ்ஞானம்; இது பிறப்பைக் குறிக்கின்றது.

அகம்=வீடு.

மின்=மின்னல்.

ஆன்மாவின் அறிவு, படிகம் போலச் சார்ந்ததன் பாலாம் சுபாவமுடைமையின், அவ்வாறும்படி, அதைச் செயற்கைப்படுத்தினர் ஒருவருமில்லையென்பதாம்.

‘மெய்ஞ்ஞான சுகநிஷ்டை சேராமலே, சோற்றுத் துருத்தியைச் சதமெனவு முண்டுண்டு தூங்கவைத்தவரார்’ என்றது, பேரின்பநிலையை யடைவதற்குக் கருவியான நிஷ்டை கூடாது, இவ்வுடலின் பொருட்டே யுழைத்து வாழ்நாள் கழித்தல் பெரிதும் தவறுன காரியம் என்பதை யுணர்த்தவே.

சோற்றுத்துருத்தி=சரீரம்.

சதம்=சாசுவதம்.

‘ தந்தை தாய் முதலான வகிலப்ரபஞ்சந் தனைத் தந்ததென தாசையோ’ என்றது, பிறப்பைக் குறிப்பாலுணர்த்தி அப்பிறப்பினைக் கூட்டிவைத்தது ஆசையே என்பதை வெளிப்படுத்தவேயாம்.

ஆசை பிறப்பை யுண்டாக்கு மென்பதை,

‘ அவாவென்ப வெல்லா வுயிர்க்குமெஞ் ஞான்றுந்
தவாஅப் பிறப்பீனும் வித்து ”

என்னும் தமிழ்மறையாலும் உணரலாம்.

"உடம்பு நீங்கிப் போங் காலத்து அடுத்த வினையும், அது காட்டுங் கதி நிமித்தங்களும், அக்கதிக்கண் அவாவும், உயிரின்கண் முறையே வந்துதிப்ப, அறிவை மோகம் மறைப்ப, அவ்வுயிரை அவ்வவா அக்கதிக்கட்கொண்டு செல்லு மாகலான், அதனை 'பிறப்பீனும் வித்து' என்றும், கதிவயத்தா னுளதாய அவ்வுயிர் வேறுபாட்டினும் அவை தன்மை திரியும் உற்சர்ப்பிணி (உலகம், வாழ்நாள், போகம் முதலியவற்றால் வளர்பிறைபோலப் பெருகுங்காலம்), அவசர்ப்பிணி '(அது அவற்றால் தேய்பிறைபோலச் சுருங்குங்காலம்) என்னுங் கால வேறுபாட்டினும் அது வித்தாதல் வேறுபடாமையின் 'எல்லாவுயிர்க்கும் எஞ்ஞான்றும்' என்றும், இஃது எல்லாச் சமயங்கட்கும் ஒத்தலால் 'என்ப' என்றும் கூறினார்" என்று பரிமேலழகர் ஷை குறளுரையின் கீழ் கூறுவது இதனை விளக்கும்.

"ஆசை வாய்ச்சென்ற சிந்தைய ராகி
அன்னை யத்தனென் புத்திரர் பூமி
வாச வார்குழ லாளென்று மயங்கி
மாளு மெல்லைக்கண் வாய்திற வாதே
கேச வாபுரு டோத்தமா வென்றுங்
கேழ லாகிய கேடிலீ யென்றும்
பேசு வாரவ ரெய்தும் பெருமை
பேசு வான்புகில் நம்பர மன்றே"

என்பது ஈங் குணர்தற்பாலதாம்.

காலம், வினை முதலியவை பிரவாகம்போல் வந்துகொண்டிருத்தலின் எதனையும் நோதற்கு ஏதுவில்லை யென்பார், 'தன்னையே நோவனோ பிறரையே நோவனோ தற்காலமதை நோவனோ, பந்தமானது தந்த வினையையே நோவனோ பரமார்த்த மேது மறியேன்' என்றார்.

பரமார்த்தம்=மேலான அர்த்தம்.

2. "அழுதாலுன்னைப் பெறலாமே" என்று மாணிக்கவாசகர் கூறுகிறபடி, 'இறைவனே! ஆகாய கங்கைபோல் பெருக்கெடுத் தோடும் எனது அன்பின் பெருக்கை நீ காணவில்லையோ' என்று வருந்துகிறார் ஆசிரியர்.

விண் ஆறு=ஆகாய கங்கை.
வெற்பு=மலை.
விழுந்தாங்கு=விழுந்தாற்போல்.
கண் ஆறு=கண்ணீர்ப் பெருக்கு.
தண் நாறு=குளிர்ச்சி மிகுகின்ற.
பண் நாறு=பண்களுள் பிரகாசிக்கின்ற.

3. இறைவனே ! மனம் வாக்கு காயங்களால் உன்னை நாடும் அடியேனுக்கு உனது மெய்யடியாரின் சங்கம் கைகூடுவதென்றோ என்றிரங்குகிறார்.

கூட்டம்=சங்கம்.

---




## கூட்டு வர்த்தகம்.

ஒருதேசம் முன்னேற்ற மடைவதற்குக் கைத்தொழில், வர்த்தகம், விவசாயம் முதலிய பல துறைகளிருப்பினும் அவற்றுள் வர்த்தகந்தான் முதன்மைபெற்று நிற்கின்றது. வர்த்தகத்தை எந்த நாடு தீவிரமாய்க்கொண் டிருக்கின்றதோ அந்த நாடு சீரும், சிறப்பும் பெற்றுப் பிரகாசிக்குமென்பது ஒவ்வொருவரும் பிரத்தியக்ஷமாக உணர்ந்ததே. ஐரோப்பா, அமெரிக்கா, ஜப்பான், ஜர்மன், சைனு முதலிய தேசங்களெல்லாம் செல்வ வளம்பெற்றுத் திகழ்வதற்குக் காரணம் வியாபார விருத்தியே. வியாபாரத்தை விருத்தி செய்வதற்கு அத்தேசத்தார் பல உபாயங்களைக் கைக்கொண்டிருக்கின்றனர். குறைந்த முதல் வைத்துச் செய்யத்தக்க சிறிய வர்த்தகங்களை, ஒருவர் தனித்தோ, இரண்டு மூன்றுபேர் சேர்ந்தோ செய்கிறார்கள்; அதிகத்தொகை முதல் வைத்துச் செய்யவேண்டிய பெரிய வியாபாரங்களை நூற்றுக்கணக்கானபேர்கள் சேர்ந்து செய்யத் தொடங்குகிறார்கள். எந்த வியாபாரத்தையும் ஒருவர் தனித்துச் செய்வதைக் காட்டினும் பலர் கூடிச் செய்வதிலேயே மிகுந்த அனுகூலமிருக்கின்றது; பலர் கூடுவதால் ஒவ்வொருவரும் தங்கள் தங்களுக்கியன்ற அளவு சிறு சிறு தொகை முதல்வைத்து ஏக காலத்தில் பெருந்தொகை சேர்த்து எத்தகைய வியாபாரத்தையும் இடையூறின்றித் தொடங்கிச்செய்வதற்கு அனுகூலம் ஏற்பட்டுவிடுகிறது; அந்த வியாபாரசம்பந்தமான பல தொழில்களில் ஒவ்வொன்றை ஒவ்வொருவர் கவனித்துக்கொள்வதால் காரியக்கேடின்றி வியாபாரம் மேலோங்கி வருகின்றது. இவையன்றி மேற்

கூறிய தேசத்தார்கள் இன்னும் சில நல்ல முறைகளையும் அனுசரிக்கிறார்கள்:

தாங்கள் ஆரம்பிக்கும் வியாபாரத்தொழிலில் மனவொற்றுமையை மிகுதியும் கைக்கொள்ளுகின்றார்கள்; தங்களுக்குள் தலைமை ஸ்தானம் வகிப்பவரிடத்திலும், காரியம் பார்க்க நியமிக்கப்படுபவரிடத்திலும், கௌரவம் பாராட்டுகிறார்கள்; நம்பிக்கை வைக்கிறார்கள்; அவர்கள் வியாபாரசம்பந்தமாகச் செய்யும் காரியங்களைத் தாங்கள் செய்தனவாகவே மிக்க திருப்தியுடன் ஏற்றுக்கொள்கிறார்கள்; அவர்கள் கணக்கில் காட்டும் வரவு செலவுத்திட்டங்களையும், இலாபப்பங்கையும் மறுப்பின்றி ஒரு மனதுடன் ஒப்புக்கொள்கிறார்கள்; அவர்கள், தங்களை நம்புவதற்குத் தக்கபடியே தலைமையாளரும், காரியஸ்தரும் நடுநிலைமையுடனிருந்து எவருக்கும் வஞ்சனைபுரியாமல் சகல விஷயங்களிலும் நாணயமாக நடந்துகொள்ளுகிறார்கள். இத்தகைய முறைகளையெல்லாம் அவர்கள் அனுசரித்து நடந்துவருவதனாலேயே, கோடிக்கணக்கான பணம் முதல் வைத்துச் செய்யவேண்டிய பெரிய பெரிய வியாபாரங்களையெல்லாம் தொடங்கி நடத்தி ஏராளமான இலாபத்தை அடைந்து அவர்களிற் பெரும்பான்மையோர் எப்பொழுதும் செல்வத்திற் சிறந்தவர்களாகவே விளங்கி, இஷ்டபோகங்களையெல்லாம் அனுபவித்து இன்புற்று வருகிறார்கள். அவர்கள், தங்கள் உள்நாடுகளில் இவ்வாறு நடத்துவதுமாத்திரமன்றி ஆயிரக்கணக்கான மைல் தூரங்களிலுள்ள புறநாடுகளிலும் மேற்கூறிய கூட்டுவர்த்தகம் நடத்தி மேன்மையடைகிறார்கள். அவர்களால் தொடங்கப்பட்ட வியாபாரக்கம்பெனிகள், மேற்கூறிய நல்ல முறைகளை அனுசரித்து வருவதால் பல்லாண்டுகளாகப் பற்பல இடங்களில் நிலைபெற்றிருக்கின்றன. அவர்கள் இவ்வாறு கூட்டுவர்த்தகத்தால் மேன்மையடைந்தார்களென்பதற்கு, இந்தியாவில், ஆதியில் ஆங்கிலேயர்களாலும், பிரஞ்சுக்காரராலும் ஏற்படுத்தப்பட்டிருந்த ஈஸ்ட் இந்தியாக் கம்பெனிகளே உதாரணமாயிருக்கின்றன. ஆங்கிலக் கம்பெனியின் சார்பாக ஆங்கிலேயர்களுக்கு இந்தியாவில் ஆட்சியும் ஏற்பட்டதென்பது உலகறிந்த விஷயம். கூட்டுவர்த்தகமானது இவ்வாறு இராஜ்யாதிகாரத்தையும் உண்டாக்கிவிடக்கூடியதாயிருக்குமானால் வேறு எத்தகைய சௌகரியத்தைத் தான் உண்டாக்கமாட்டாது?

வேற்றுநாட்டினர் இங்ஙனம் கூட்டுவர்த்தகத்தால் மேட்டிமை

யுற்று வாழ்ந்துவந்தும், நம் தேசத்தார் இவ்வியாபாரதந்திரத்தில் நாட்டமின்றி ஏதேதோ பாட்டுப் பாடிக்கொண்டு வீண் காரியங்களில் தலையிட்டுத் தூங்கி விழுந்து கொட்டாவிவிட்டுப் பழங்கதை பேசி வெறும் வாயை மென்றுகொண்டிருக்கின்றனர். இவர்களிற் சிலர் வியாபாரத் துறையில் இறங்கி யிருந்தாலும் அவர்கள் நடத்தி வரும் வியாபார தந்திரங்கள் மிக்க விநோதம் பொருந்தியவைகளா யிருக்கின்றன:

நம்மவர்களிற் பெரும்பான்மையோர் கூட்டுவர்த்தகத்தைக் கேட்டு வர்த்தகமென்று நினைக்கிறார்கள்; "பங்கு வியாபாரம் பைத்தியக்காரனும் செய்யான்" என்று ஒரு பெரும் பைத்தியக் காரத்தனமான பழமொழியைப் பேசிக்கொண்டு, "அப்பா! ஒருவனோடு சேர்ந்து கூட்டு வியாபாரம் செய்வதைக்காட்டிலும் பேசாமலிருந்துவிடலாம்; அதில் பெருந் தொல்லையுண்டாகும்; அவனுடைய சங்கதி நமக்குப் பிடிக்காது, நம்முடைய போக்கு அவனுக்குப் பொருந்தாது; அப்படிப் பொருந்தாதவனோடு சேர்ந்து வியாபாரம் செய்வதைப்பார்க்கிலும் நம்மால் முடிந்தவரையிலும் நாம் தொழில் நடத்துவதே கவலையற்ற வியாபாரமாயிருக்கும்" என்று பல பக்கா யோசனைகளைச் செய்து ஒருவரோடும் சேராமல், கையில் பணமும் இல்லாமல், ஆயிரம் ரூபாய் முதல் வைக்கவேண்டிய ஒரு வியாபாரத்திற்கு நூறு ரூபாய் வைத்து ஆரம்பதினத்தில் ஆடம்பரமாக மாவிலைத் தோரணங்கள் கட்டி மேளதாளத்துடன் தொழிலை ஆரம்பித்துவிடுகிறார்கள். ஏதோ இரண்டு மாதங்கள்வரை அங்கே வியாபாரம் நடப்பதுபோல் தோன்றுகிறது; மூன்றாவது மாதத்தில் கடை இருந்தவிடந்தெரியாமல் போய்விடுகிறது.

இன்னும் சிலர், வியாபாரத்திற்குத் தாங்கள் பணம் போடாமல் பிறரிடம் தந்திரமாக வாங்கிப்போட்டு, அதைக்கொண்டு வியாபாரம் நடத்த யோசனைசெய்து, இரண்டு மூன்று பேர்களைப் பங்காளிகளாகச் சேர்த்து அவர்களை மாத்திரம் பணம் போடச் செய்து, சில மாதங்கள்வரை தொழில் நடத்தி, வரும் இலாபத்தையும் முதலையும் வாயில் போட்டுக்கொண்டு பொய்க் கணக்கெழுதிக் கூட்டாளிகளுக்கு நஷ்டங்காட்டிவிடுகிறார்கள்; சிலர் அவ்வாறே பிறரிடம் முதல் பணம் வாங்கி அவர்களையும் கூட்டாளிகளாகச் சேர்த்துச் சில வருடங்கள்வரை வியாபாரம் நடத்திக் கொஞ்சம் இலாபங் கிடைத்தவுடன், "நாம் கஷ்டப்பட்டுச் சம்பா

தித்து இந்த வெட்டி ஆசாமிகளுக்கும் ஏன் பங்கு கொடுக்க வேண்டும்; இப்போது கிடைத்திருக்கும் இலாபத்தைப் பிரித்துக் கொண்டு இவர்களை விலக்கிவிட்டால் நாம் தனியாகத் தொழில் நடத்தி அளவற்ற பணம் சம்பாதித்துவிடலாம்" என்று அவர்கள் முதற்பணம் கொடுத்த நன்றியையும் மறந்து தங்களுக்கு அதிகத் தொகை கிடைக்கும்படியாகவே கணக்கு முடித்துப் பாகப் பணத்தைக் கைப்பற்றிக்கொண்டு அவர்களைப் பிரித்துவிடுகிறார்கள்; சிலர், "நாம் மேல்நாட்டுக் காரரைப்போல் கூட்டு வர்த்தகம் செய்யவேண்டும்" என்று ஆங்காங்கே பெருங் கூட்டங் கூட்டிப் பிரசங்கம் புரிந்து நூற்றுக்கணக்கானபேர்களைக் கூட்டாளிகளாகச் சேர்த்து இலட்சக்கணக்கான பணங்களைத் திரட்டிப் பெரிய வியாபாரம் ஒன்றுதொடங்கி அதற்கு லிமிட்டெட் கம்பெனியென்று பெயர்வைத்து வெகு டாம்பீகத்தோடு தொழில் நடத்திப் பலபேர் கொடுத்த பணத்தைக் கொஞ்சம் கொஞ்சமாக ஒதுக்கிப் பதுக்கி விட்டுக் கணக்கைமாத்திரம் ஒழுங்காக நஷ்டங்காட்டி முடித்து இரண்டு மூன்று வருடங்களில் கம்பெனியை மூடிவிடுகிறார்கள்; இன்னும் சிலர் ஒன்றுகூடி ஒரு பெரிய வியாபாரத்தைத் தொடங்கி நடத்துகிறார்கள்; அப்படி நடத்தும்போதே ஒருவரையொருவர் ஏமாற்றும் சூழ்ச்சிகளையே இரவும் பகலும் ஓயாமல் யோசித்துக் காரியங்களை நடத்தியும், பொதுப்பணத்தில் சில தொகைகளை ஒருவருக்குத் தெரியாமல் மற்றொருவர் கவர்ந்தும், பொய்க் கணக்குகளை யெழுதி ஒருவருக்கொருவர் காட்டியும் அந்த வியாபாரத்தைச் செய்துவருகிறார்கள்; அதனால் அந்த வர்த்தகம் சிலமாதங்களிலோ, வருடங்களிலோ இருந்தவிடந் தெரியாமற் போய்விடுகிறது; இன்னும் சிலர் சேர்ந்து வியாபாரம் நடத்தத் தொடங்கிச் சில தினங்களுக்குள்ளாகவே ஒருவர் நடத்தை ஒருவருக்குப் பிடிக்காமல் சண்டை சச்சரவுகள் போட்டு வம்பு வழக்குகள் தொடுத்துக் கோடுநாடுகளுக்குப்போய்த் தங்கள் வியாபாரக் கம்பெனியை வெகு சீக்கிரத்தில் உடைத்துக் குலைத்துவிடுகிறார்கள். இன்னும் எத்தனையோ விநோதச்செயல்கள் நம்மவர்க்குள் வியாபார சம்பந்தமாக உண்டு. ஆனால், இப்படிக் கூறிவந்ததனால் நம் நாட்டில் உள்ள எல்லோருமே இத்தகைய நடக்கையுடையவர்களா யிருக்கிறார்கள் என்று நாம் சொன்னதாக நண்பர்கள் கருதிவிடக்கூடாது. ஒழுங்கான வியாபாரத் துறைகளை அனுசரிக்கிறவர்களும் இங்கே சிலர் உண்டு; நகரத்தாராகிய நாட்டுக்கோட்டைச் செட்டியார் வகுப்

பினருள்ளும், முஸ்லிம்களுள்ளும், தென்நாட்டு நாட்டார்களுள்ளும், வட இந்தியாவில் உள்ள வங்காளிகள், குஜராத்திகள் முதலிய சில வகுப்பாருள்ளும் கூட்டுவர்த்தகத்தையும், ஒழுங்கான வியாபாரத் துறைகளையும் அனுசரித்து ஊதியம் சம்பாதித்து மேன்மையடைந்து வருகிறவர்கள் சிலர் இருக்கின்றார்கள். எனினும் மேல் நாட்டு வர்த்தகர்களை உத்தேசிக்க, இவர்களின் தொகை, நம் நாட்டிலும் சிறந்த வர்த்தகர்கள் இருக்கின்றார்கள் என்று பெருமையோடு சொல்லிக்கொள்வதற்கு ஏதுவில்லாமல் மிகக் குறைந்திருக்கின்றது; ஒழுங்கீன வியாபாரத்துறைகளைக் கொண்டிருப்பவர்களே நம் நாட்டில் மிகுதியும் நிறைந்திருக்கின்றனர். அம்மிகுதி பற்றியே நம்நாடு மேற்கூறியபடி கூட்டு வர்த்தக ஒழுங்கு தெரியாதவர்கள் மலிந்த நாடாயிருக்கிறது என்று கூறினோம்.

இவ்வாறு, நம் நாட்டினருட் பெரும்பாலோர், கூட்டுவர்த்தக முறை தெரியாமலும், வியாபார ஒழுங்கு தெரியாமலும் பற்பல ஒழுங்கீனமுறையில் வர்த்தகத் தொழில் புரிந்து வருவதனாலும், சிலர் பணக்காரர்களாயிருந்தும் வியாபாரத்தையே கவனிக்காமலிருப்பதாலுமே இக்காலத்தில் நம்நாடு செல்வமிழந்து, சிறப்பொடுங்கி, வறுமைக் குட்பட்டு, வளங்குன்றி, மகிழ்ச்சி குறைந்து, இகழ்ச்சி மிகுந்து வருகின்றது.

ஆதலின், சகோதரர்களே! நண்பர்களே! நம்நாடு க்ஷேமமுற வேண்டுமானால், செல்வத்திற் சிறந்து விளங்கவேண்டுமானால், நமக்குள் இருக்கும் வேற்றுமைகளை ஒழித்து ஒற்றுமையைக் கைக்கொண்டு கூட்டுவர்த்தக முறையை எல்லோரும் அனுசரிக்கவேண்டும். நமக்குள் இக்குறைகளை வைத்துக்கொண்டு, தந்திரமாகத் தொழில் நடத்தி ஊதியந்தேடும் பிறரைத் திட்டிக்கொண்டிருப்பதால் மாத்திரம் பயனில்லை. அதைவிட்டு நாம் முன்னேறுவதற்கான கூட்டுவர்த்தகம் முதலிய பல நல்ல துறைகளிற் பிரவேசிக்க வேண்டும். நம் உயரிய எண்ணங்கள் கைகூட முழுமுதற் கடவுளின் பேரருள் உண்டாவதாக.

ஓம் தத் ஸத்.






## பாபு சுரேந்திர நாத் பனர்ஜி.

(152-ம் பக்கத் தொடர்ச்சி)

ஆறும் அகில இந்திய காங்கிரஸ் மகாசபையின் அவைத் தலைமை வகித்த சர் பி. எம். மேதா என்பார், 'இப்புவியில் இதுவரை தோன்றியுள்ள பல சொல் வல்லுநரையும் தம் சொற் பெருக்கு வன்மையால் தாழ்த்தி, இந்தியாவின் குறைகளை இங்கிலாந்து பாராளுமன்றத்தில் திடம்பட, அகிலமே அஞ்சும் ஆற்றலுடன் எடுத்தோதிய உலகம் புகழும் உத்தம பாரத புத்திராகிய பாபுவை நான் இப்பொழுது மறந்து செல்ல முடியவில்லை'' என்றதினின்றும் பாபுவின் தாய்நாட்டன்பின் பெருமிதத்தைக் கண்டலறியலாம். அன்னையின் அறப்பணியில் தலை சிறந்த பாபுவை 1895-ம் ஆண்டில் பூனாவில் கூடிய பதினோராம் காங்கிரஸ்விழா தலைவராகக் கொண்டது. அக்காங்கிரஸ் விழாவில் சில குழப்பங்கள் தலைவர்களுள்ளாகவே தோன்றினவாயினும் அவற்றையெல்லாம் தமது அன்பாலும் ஆற்றலாலும் பனர்ஜி அடக்கி, அழகு பெறச் சபையை நடத்திவைத்தனர். அவர் 'அக்கிராசன விரிவுரை' யைப் புகழ யாராலியலும்! மூன்றுமணி நேரம் வரை அக்கிராசனர் முன்னுரை நிகழ்ந்தது. எள்ளிட விடமில்லாமல் எங்கணும் நிறைந்த அன்பர்கள் மூச்சுவிடுவது மறியாதவாறு பேசுவதினின்றும் நீங்கி யிருந்தனரென்னில் தேசமகாஜனங்களுக்கு பாபுவிடத்துள்ள மரியாதை, அன்பு முதலியவற்றை என்னென்றெழுதுவோம்! தெய்வீகத்தன்மையால் தோன்றிய இவர் போன்றவருக்கே இத்துணைச் சொல்வன்மை நயம் முதலியன பொருந்தப்பேச இயலுமேயன்றி, ஏனையோர்க்கு இத்தன்மை எளிதில் அமையாதென்று அச்சபைக்கு வந்திருந்த பலரு மியம்பி நின்றனர். இவர் இரண்டாம் முறையாக 1902-ல் ஆமதாபாத்தில் நடைபெற்ற பதினெட்டாம் அகில இந்திய காங்கிரஸ் மகாசபைக்கும் தலைமை வகித்தார்.

பாபுவின் சரித்திரத்தில் வங்காளப் பிரிவினை ஓர் முக்கியாம்சம் பெற்று விளங்குகின்றது. அப்பொழுது எதிர்வாதம் செய்யத்தலைப்பட்ட கட்சியின் தலைவர் பாபுவேயாம். அக்காலத்தில் பாபு பிரிவினையால் விளையும் துன்பங்களைத் தம் தாய் மொழியில் ஆங்கிலத்திலுள்ள வன்மையுடன் எடுத்தோதி, வங்காள வாசிகளால் அவதார புருடரெனப் போற்றப் பெற்றார். இவரது முயற்சி முற்றுப்பெறாது போகவே, அன்னியநாட்டுப் பொருள்களை விலக்குமாறு வங்காள முழுவதும் வலுத்த பிரசாரம் செய்து சுதேசியத்தை ஆதரிப்

பதே அன்னியநாட்டுப் பண்டங்களை விலக்குவதாகும் என்று விரித்துரைத்தார். இனி அவர்

### மேற் கடல் கடந்த வரலாறு

மிகவும் முக்கிய மாதலின் அதனைச் சிறிது கூறுவோம். அவர் சட்டசபைச் சீர்திருத்த விஷயமாக 1897-ல் 'வெல்பி கமிஷனில்' சாக்ஷியங்கூறச் சென்றார். அப்பொழுது இந்திய ராஜீய விஷயங்களைப் பொருத்திச் சொல்லுவதில் அவருக்கிருந்த ஆற்றலை மேல்நாட்டார் பெரிதும் போற்றினார்கள்; இவருடைய சொற்பொழிவுகளைப் பல இடங்களிற் கேட்டுப் பேரானந்த மெய்தினர். இவர் கடைசி முறையாக 'இம்பீரியல் பிரஸ் கான்பரன்ஸ்' விஷயமாக, இங்கிலாந்திலுள்ள இந்திய அரசாங்கக் கூட்டத்தாரோடு கலந்து பேசச் சென்று அப்பொழுதும் நன்கு மதிக்கப்பட்டு வந்தார். அவருடைய ஊக்கத்தையும் தொண்டையும் பாராட்டி மகாஜனங்கள் அவரை

### சட்டசபை அங்கத்தினர்

ஆகத் தேர்ந்தெடுத்தனர். அவருடைய பொதுநல சேவையைப் போற்றி 1876-ல் அவரை நகரபரிபாலன சபைக்கு அங்கத்தினராகக் கல்கத்தா வாசிகள் தேர்ந்தெடுத்தனர். அதிலிருந்து தொடர்ச்சியாக 20 ஆண்டுகள் வரை அவர் அதன் அங்கத்தினராக இருந்து 1899-ல் பல அசௌகரியங்களை முன்னிட்டு அப்பதவியை 'ராஜீநாமா' செய்தார். திருத்தப்பெற்ற சட்டசபையின் அங்கத்தினராக பாபு 1894-லும், 1896-லும், 1898-லும் தேர்ந்தெடுக்கப்பெற்றார். அவர் சட்டசபையிலிருக்கும்பொழுது 1995-ம் ஆண்டைய 'சுகாதார மசோதா'வை நிறைவேற வைத்தவர்களில் முக்கியஸ்தராக விளங்கினார்.

### முடிவுரை.

பாபுவுக்கு ஒரு புத்திரரும், ஐந்து புத்திரிகளும் உளர். சொல்லுவதை அனுஷ்டானஞ் செய்துகாட்டும் உயரிய தன்மையுள்ள அவர் தமது பெண்களை நன்கு கல்வி பயிலச் செய்தார். வயோதிக நிலையை யடைந்த அவருக்கு ஏகாந்த வாழ்வு ஏற்றதாயமைய, கல்கத்தாவுக்கு 13-மைல் அப்பாலுள்ள மணிராம்பூர் என்னுமிடத்தில் அவர் தம் அந்தியக்காலத்தைக் கழிக்கக் களித்தார். அவர் தமது வீட்டைச் சுற்றியுள்ள தாவரங்களை வளர்ப்பதிலும், தேகப்பயிர்ச்சியை அத்துணை வயோதிகத்திலும் இடைவிடாது செய்வதிலும் பிரியமுடையவர். முப்பத்தைந்தாண்டுகள் இடைவிடாது தேசசேவை புரிந்த அவருக்கு ராஜீய விஷயத்தினின்றும் நீங்கியிருப்பது மிக்க கஷ்டமாயிருந்தது. ஆனால் உடல் இடந்தரவில்லை. இப்பெரியாரின் சரிதத்தினின்றும் நாம் பல அரியவிஷயங்களை அறியற்பாலோம். 'அறையிலாடிய பின்னரே அம்பலத்தாடவேண்டு' மென்பர் பெரியார். நாம் ஒரு விஷயத்திற் புகு முன்னர் அதற்கேற்ற பக்கபலங்களை முறையே செய்துகொள்ளவேண்டு மென்பதை இப்பெரியார் சரிதத்தினின்றும் நாம் அறிகின்றோம். ஆசிரியராகவும், நியாயவாதியாகவுமிருந்த பாபு அரங்கேறி அபாரமாகப் பேசும் வல்லமையை யடையப் பட்டபாடு இயம்பற்பாலதன்று. அதற்காக அவர் பல

நூல்களைக் கற்றுப் பயின்று பின்னரே வெளியில் இராஜீய மேடைகளிற் பேசத் தொடங்கினார். மேடையிற் பேசிப் பிறர் மாலைபோட, கரகோஷம் செய்ய, மங்கள வாத்திய ஒலிமுழங்க, ஊர்வலம் வருவதை அவர் கேவலமாக நினைத்தவர்; உள்ளொன்று வைத்து நாவாலொன்று பேச நாணுபவர்; பட்டங்களைக் கிட்டவிடாதவர்; சட்டசபை அங்கத்தினராகவும், காங்கிரஸ் தலைவராகவும் ஆகித்தான் தேசசேவை புரிய வேண்டுமென்ற கொள்கையில்லாதவர்; அவற்றைவிட எள்ளளவு தூய மனதுடன் புரியும் தொண்டே சிறந்ததென்பது அவருடைய சித்தாந்தம்.

" பொய்யாமை யன்ன புகழில்லை யெய்யாமை
எல்லா வறமுந் தரும் "

என்பதை அவர் உணர்ந்தொழுகியவர். உயிர்பட வரினும் உள்ளதை ஒளியாது கூறும் மாண்பினருமவரே. இவர் கல்கத்தா ரிப்பன் கலாசாலையாசிரியராகவிருந்த அதேகாலத்தில் ராஜீயவாதியாகவும், கலாசாலை உபந்நியாசகராகவும், மூன்று கலாசாலைகளின் அதிகாரியாகவும் இருந்து, அன்றன்றைய வேலைகளை அன்றன்றே முடிப்பதும், தமது குமாஸ்தாக்களைச் சரிவர வேலை வாங்குவதும், கணக்குகளைத் தினந்தோறும் பரிசோதிப்பதும், பாடங்களை மூன்று கலாசாலைகளிலும் உபந்நியாசிக்கத் தயார் செய்வதும், இவற்றுடன் கூட, தேகாப்பியாசம், மாலை உலாவுதல், பூஜை முதலியன செய்தல், நண்பர்களுடன் கூடுதல், விருந்தோம்பல் இவைகளை நடத்தலும் ஆகிய இவற்றைச் செய்து வந்த இவருடைய ஆற்றலை நாம் சற்று ஆலோசித்துப் பார்த்தால் இவருடைய உழைக்குந்தன்மை நமக்குப் புலப்படாமற் போகாது. ராஜீயத்துறையில் இவர் வங்காள முடிசூடா மன்னராக விளங்கினரென்னில் இவருடைய தேசபக்தியை எடுத்துரைக்க நாம் எம்மாத்திரம். இப்பெருந்தகையை 1925-ம் ஆண்டு ஆகஸ்டுத் திங்களில் விண்ணுட்டவர் தம் விருந்தினராக ஏற்றனர். பாரதநாடு முழுவதிலும் இவருடைய பிரிவுக் காற்றாத மக்கள் கூட்டங் கூட்டி யமனைக் கண்டனஞ் செய்தனர். வங்காளம் வாடி வருந்திநின்றது. பாரதத்தாயும் வருந்தினளாயினும் மற்றொரு புதல்வனைப்பார்த்துச் சற்று ஆறுதலடைந்தாள்.

ஸ்ரீ. லக்ஷ்மி காந்தன்.

---

## வருகின்ற காங்கிரஸ்.

பாரத தேசம் இயற்கையாலமைந்தது; இறைவனருள் பொலிவது; இன்பத் தேன் சொட்டுவது; இருளை இரியச்செய்து அருளை அளிப்பது; இகபரசுகங்களை எளிதில் ஈவது. இயற்கைத்தாயே பாரததேவி. அவ்வியற்கை வழிநிற்றலே சுதந்திரம்; அதனாலடைவதே இன்பம். அவ்வழி நீங்கிச் செயற்கையால் வாடுவதே பந்தம்; அதனாலுறுவது துன்பம். இயற்கையின் வழியாகவே உயிர்கள் இயங்குகின்றன. போலியின்பங்களை விரும்பி, ஏமாப்பில்லா இயற்கை வழிமாறி, செயற்கையால் பிணிக்கப்பட்டு, நாடும் நாட்டுமக்களும் துன்பப்படுவதைப் போக்க விளங்கி, விடுதலையைப் போதிக்க விரைந்து வந்

தனர் இயற்கைத்தாயின் இன்புள்ள புதல்வர்கள் பலர்; அவர்கள்கூடி, விடுதலை வழியை விளக்க, காங்கிரஸ் மகாசபையை ஸ்தாபித்தனர்.

அதுவுந்தொடங்கி ஆண்டுகள் நாற்பதும் இரண்டுமாயின. அதன் அறஒலி அண்ட முகடுகளை அதிரச்செய்தது. அதனைப் போற்றி வளர்த்த போாற்றலுடைய பெரியாரனைவரின் பெருமைகளை யறியாதார் யாங்கணுமில்லை. காங்கிரஸ் மகாசபை உள்நாட்டில் மட்டுமன்றி வெளிநாடுகளிலும் விளங்கி நிற்றலை வீணரும் அறிவர். "தர்மங் குன்றியகாலத்துத் தாரணியில் யான் அவதாரமெடுத்து அதர்மத்தை அழித்துத் தர்மத்தைத் நிலைநாட்டுவேன்" என்றார் கண்ணன் கீதையில்; அவ்விதமே இப்பொழுது அவதரித்துக் காந்தியென விளங்குகின்றார். பிரபஞ்ச மாயையை யொழிக்கச் சிறிதுமவர் அஞ்சுவதில்லை. அப்புனிதர் காங்கிரஸ் மகாசபையின் ஆதரவினாலேயே பாரததேசம் பயனடையக்கூடுமென்று வெகு சமீபத்தில் விளக்கினார். அவர் அதனைச்சார்ந்து தொண்டியற்றலே அறமெனத்தேர்ந்து காங்கிரஸ் மகாசபையின் கருத்திற் புகுந்தார்; கதரெனும் கற்பகத்தருவைக் காண்பித்தார். அந்நாள் முதல் அவரை அவதாரபுருஷரென நாம் அறியலானோம். அக்கதர் ஜாதி, மத வித்தியாசமின்றி அணிவாரனைவருக்கும் அணிகலனென விளங்குகின்றது.

இத்தகைய பெருஞ் சிறப்பினைத்தந்த காங்கிரஸ் மகாசபை இன்னும் எத்தனையோ காரியங்களையெல்லாம் சாதித்து, பாரதமக்களுக்கு இயற்கையாயுள்ள தேசாபிமானத்திற்குப் புத்துயிரளித்து வந்திருக்கிறது. இதன் பெருமையை இன்னும் அறியாத பல ஆச்சரிய மனிதரும் அவனியி லுலவுகின்றனர். பத்தரைமாற்றுப் பரிசுத்தத் தங்கமான காங்கிரஸை மங்கச் செய்ய வெண்கல வீணர்பலர் உட்புகுந்து, தேசமே நலிவொடு தேய்ந்திடவும், மனிதரின் பாசமே பெரிதெனப் பார்ப்பவர் மிகுந்திடவும், நாட்டின் கண்ணுள்ளார் பசியினால் நலிந்திடவும், தன் வயிறாட்டுதலே பெரிதென உள்ளுவோர் சேரவும், ஆணுருக்கொண்ட பெண்களின் கூட்டம் பெருகவும், காங்கிரஸ் மகாசபையில், கக்ஷிகள் அதிகமாயின.

இதற்கு அவரவரின் கொள்கைப் பேதம் முக்கிய காரணமல்ல. சுயநலமும், உயர்வு தாழ்வு கற்பிக்கும் வகுப்பு வாதமும், மதவித்தியாசம் பாராட்டும் மதமும் முக்கிய காரணங்களாக நிற்கின்றன. தேசீய விஷயத்தில் வகுப்பு வாதத்தையும் மதாசார பேதங்களையும் கலத்தல் அழகும் முறையு மாகாதவை. அவற்றிற்கு விமோசனம் தேடவேண்டுவது அவசியமாயினும் அவற்றைத் தமக்குள் ஒருவிதமாக முடிவு செய்துகொண்டு காங்கிரஸ் வழி நிற்றலே தலை. காங்கிரஸும் இவ்விஷயத்தில் ஆனவற்றைச் செய்தே வந்திருக்கின்றது. ஆனால் ஜாதிக் கொடுமை மிகுந்து மக்களின் மனதைப் புண்படுத்திவிட்டதென்பதை அறியாதவரிலர். அது காங்கிரஸ் ஸ்தாபனத்தின் உள்ளும் புறமும் எரிந்து கிளர்ச்சிப் புகையைக் கிளப்பிவிட்டுக்கொண்டிருப்பதைச் சுயமரியாதை யுள்ளவன் எவனும் உணராமலிரான்.

நிற்க, தென்னாட்டில் ஜாதிக்கொடுமையும், வகுப்பு வாதமும் மிகுந்து

கொண்டே வருகின்றன. இதுவரையில் எண்ணிக்கையற்ற மகாநாடு கூட்டியவரில் ஒற்றுமைக்கு வழிதேடினுரெவருமில்லை. மகா நாடுகள் மகா காடுகளே யாயின; அவற்றில் ஒழித்தல் தீர்மானங்களே ஒருகோடி யிருக்கலாம்; இவ்விதம் அவை வேற்றுமையைப் பெருக்க மூண்டன. இஃதன்றி, தமிழ் நாட்டுப் பத்திரிகைகள் பல தமது கடமைகளை மறந்தன; பொருளீட்டு வதையே போற்றுவனவாயின. புதிய தினசரிகள் தோன்றியதில் ஒன்றேனும் ஒன்றுபட்டவாழ்வை உணர்த்துவதாயில்லை; வாரந்தோறும் வகுப்புத் துவேஷமும் வாக்குவாதமும் வம்பும் விளைத்தெழுதுகின்றன; ஒற்றுமை மகாநாட்டைக் கூட்டுவாரில்லை. பொதுநல ஊழியம் போய், சுயநலபபேய் தலைவிரித்தாடுகின்றது. அன்பு வெள்ளம் வற்றி அகந்தை வெள்ளம் பெருகி யோடுகின்றது; தாறுமாறாக எழுதுவதும், விளம்பர விகடவேலைபுரிவதும், வேடிக்கை பார்ப்பதுமே பத்திரிகைகளின் தொழில்களாகிவிட்டன.

இவ்விதம் நம்முள் சண்டை மிக, மண்டைவலி அதிகரிக்குமேல் நாம் தேசத்தொண்டை எவ்வாறியற்றித் தூயவராவோம்! நம்முள் துவேஷமான சித்தவிருத்தி அதிகரிக்குமானால் நாடென்ன நிலையையடையும்; அதன் முடிவென்னவாகு மென்பதைச் சிறிது சிந்திக்கவேண்டும். ஓரூரை யடைய வேண்டியவன் ஒரேவழியை நாடுவதுபோல, தேசநன்மையென்ற ஊரை யடைய விரும்பும் உரவோன், காங்கிரஸ் வழியைக் கடைப்பிடித்தலே கருமமாம். நமது தாய் காங்கிரஸ் வடிவானவள்; பொல்லாத சேயைத் திருத்தும் பொற்பினை யுடையவள். ஆதலின் அவளையடுத்து, விதண்டாவாதிகளை அன்பால் வென்று, ஒன்றுபட்டு ஓங்குதல் வேண்டும். தூங்குவதற்குத் தருணமிதுவன்று.

அன்புடையீர்! இவற்றையெல்லாம் கவனிப்பின் நன்மையைநாட இதுவே தருணமென்பதை எளிதி லுணரக்கூடும். காங்கிரஸ் சென்னைக்கு வரும்படியான பாக்கியத்தைத் தமிழ்நாடு அடைந்திருக்கின்றது. இச்சமயத்திலாயினும் நாம் ஒன்றுபடவேண்டும். பிணக்குற்ற சகோதரர்கள் ஓர் விவாககாலத்தில் ஒன்றுபடுவது பிரபஞ்சத்தில் வழக்கம். அதுபோலக் காங்கிரஸ் விவாக நாள் வருகின்றது. அங்கு நமக்குள்ள குறைகளை விளக்கி விமோசனம் தேடுதலே நாகரீக மடைந்தோரென்று நாம் கூறிக்கொள்வதன் குறிப்பாகும். நமது நாகரீகமற்ற வேறுபாடுகளைக்கண்டு வெளிநாட்டார் நகைக்கின்றனர்; ஏளனஞ் செய்கின்றனர். இந்நிலையினின்று நாம் இனியேனும் நீங்குவோம். இந்தக் காங்கிரஸ் டிசம்பரில் சென்னைமாபுரியில் கூடும்பொழுது, வாழப்பிறந்த நாம் தாழ நடவாமல் மீள வழிதேடுவோம். அன்னையின் பொன்னடி பணிந்து அடிகளின் அடிகளை வணங்கி ஆற்றலுடன் ஒற்றுமைப் பாலையுண்டு இனியேனும் நாம் உய்ந்தவராவோம். இறைவன் இன்னருள் பாலிப்பானாக.

## காந்தி தரிசனம்.

கதர் நிதிக்கு நீங்கள் தனம் அளிப்பது பெரிதல்ல; உங்கள் மனதை அளிப்பீரேல் அது மகத்தான வேலையைச் செய்யும். நீங்கள் ஒரு கதர் ஆடையை வாங்குவதால் ஒரு ஏழையின் பசி வறுமை நோய் தணிகின்றது. (மகாத்மா).

தேஸ் தாஸன்.





# வேதாந்த சார சங்கிரக வசனம்

(155-ம் பக்கத் தொடர்ச்சி)

வேதத்தில் பிரவர்த்திமார்க்கம் நிவர்த்திமார்க்கம் என இரண்டு மார்க்கங்கள் கூறப்பட்டிருக்கின்றன. இவற்றில் பிரவர்த்திமார்க்கத்தால் பந்தத்தையும், நிவர்த்திமார்க்கத்தால் மோக்ஷத்தையும் ஜீவன் அடைகிறான். உலகத்தில் எந்தமூடனுயினும் தான் பந்தப்பட்டிருக்க விரும்புவானு? விரும்பான். விடுதலையையே விரும்புவான். அந்த விடுதலையே முக்தி. (முக்தி, மோக்ஷம், வீடு என்னும் இம்மூன்றும் ஒரே பொருளைத்தரும் சொற்கள். இம்மூன்றிற்கும் விடுதலை என்பதே பொருளாம்.) ஆகலின், அந்த விடுதலையை விரும்புவோன் பந்தத்தைத் தருவதான பிரவர்த்திமார்க்கத்தைக் கைக்கொள்வானே? கொள்ளான். நிவர்த்திமார்க்கத்தையே கைக்கொள்வான். அதுவே கர்ம சந்யாசம். இதுகாறும் கர்மத்திற்கும் ஞானத்திற்கும் சேர்க்கை சம்பவியாது என்பது விரிவாகச் சொல்லப்பட்டது. ஆகையால் ஞானத்தை விரும்புவோன் கர்மத்தைக் கட்டாயம் விடவேண்டும்.

**சங்கை:**—அப்படியானுல் கர்மத்தை முதலில் ஏன் கொள்ளவேண்டும்?

**சமாதானம்:**—ஒருவன் ஒரு வஸ்துவைக்கண்டு இதனுல் நன்மையுண்டாகும் என்றெண்ணி அதை முதலில் கைக்கொள்கிறுன். அங்ஙனம் கொண்ட பிறகு அதனுல் யாதொரு பயனுமில்லை யெனத் தெரிந்துகொள்வானுயின் மீண்டும் அவ்வஸ்துவை அவன் கோருவானே? கோரமாட்டானன்றே? அப்படியே 'இஷ்டத்தைச் சாதிப்பது என்னும் உத்தேசத்தால் முதலில் கிரகிக்கப்பட்டாலும் பின்னர் அதன் நிஷ்பலத்வத்தைத் தெரிந்துகொண்டவன் அதனைக் கைவிடுதலே நலமாகுமன்றே!

(எடுத்துக்கொண்ட நூலில் ஞானசாதனமாகவுள்ள சாதன சதுஷ்டயம் கூறப்படுமிடத்தில் சந்யாசத்தைப்பற்றிச் சொல்வானேன்? சந்யாசம் சாதன சதுஷ்டயங்களில் ஒன்றல்லவே? ஆகவே, அதைக்குறித்து இங்கு விவரித்துச் சொல்வது எவ்வாறு பொருந்தும்? என்னும் ஆசங்கை நிகழுமாகலின் அதற்குக் காரணம் கூறுகிறார்)

சாதன சதுஷ்டயங்களில் மூன்றாவதாகிய சமாதிஷட்கசம்பத்தியில் உபரதி யென ஒன்று கூறப்பட்டிருக்கின்றதன்றே. உபரதி என்னும் சப்தத்திற்கு முதலில் காணப்படும் பொருள்களிலிருந்து நிவிர்த்தியாதல் என்பது பொருள். இந்த உபரதியும் முக்கியம் அமுக்கியம் (கௌணம்) என இருவகைப்படும். எங்ஙனமெனின், *சப்தவிருத்திக்கு (சப்தத்தால் அறியப்படும் அர்த்தத்திற்கு) திருசிய வஸ்துக்களை விடுதல் அதாவது காணப்படும் வஸ்துக்களினிடத்துள்ள அபிமானத்தை விடுதல் என்பது முக்கியார்த்தமாம். கர்மத்தைமாத்திரம் விடுதல் என்பது அமுக்கியார்த்தம். எனவே கர்மத்தை விடுதலாகிய கர்மசந்யாசமானது சிரவணத்திற்கு அங்கமாக அங்கீகரிக்கப்பட்டுள்ளது.

---

* சப்தவிருத்தியெனினும் சக்திவிருத்தியெனினும் சொல்லாற்றல் எனினும் ஒக்கும்.

(கர்மத்தை மேற்கொண்டுள்ளவனுடைய மனம் சிரவணஞ் செய்யப் புகுங்காலத்தில் அச்சிரவணத்தில் நிலைபெற்றிராமல் பாகிய (வெளி) வியவகாரங்களில் சென்றலைந்துகொண்டிருக்குமாகலின் அங்ஙனம் செல்லவிடாமல் சிரவணத்தில் நிறுத்தும் பொருட்டுக் கர்மங்களை விடுதலாகிய கர்மசந்யாசம் அத்தியாவசியமாம். ஆகவே இது சிரவணத்திற்கு அங்கமாகவுள்ளது. ஆனால் கர்மங்களை விடுதல் மாத்திரம் போதாது. கர்மங்களை விடுதல் முதல் அப்பியாச (அங்க) மாகக் கொள்ளப்பட்டிருக்கிறதே யொழிய அதுவே முக்கியமல்ல. எந்த எந்தப் பிரிய வஸ்துக்களைக் காண்கின்றேமோ அந்த அந்த வஸ்துக்களினிடத்துள்ள அபிமானத்தை விடுவதே அத்தியாவசியமானதாம். மனம் ஓரிடத்தில் நிலைபேறுடையதாகாமல் ஓடுவதற்குக் காரணம் விஷயங்களினிடத்துள்ள அதாவது திருசிய வஸ்துக்களினிடத்துள்ள ஆசையே யென்பது ஆராயுமிடத்துப் புலனும். ஆகையால் மீண்டும் மீண்டும் தலையெடுக்கும்படியான மேல் கிளைகளை வெட்டுவதைக் காட்டிலும் மரத்தின் ஆணிவேரையே பிடுங்கி எறிந்துவிடுவோமாயின், அம்மரம் மறுபடியும் தலையெடுக்காமல் உலர்ந்துபோகு மதுபோல, மனம் ஓடி யுழல்வதற்குக் காரணமான விஷயாபிமானத்தையே விட்டுவிடின் மனம் எங்கும் ஓடி யுழலாமல் சிரவணத்தில் நிலைத்துநிற்கும். இவ்வாறு விஷயாபிமானத்தை விடுவதே சந்யாசமாம். இதுவே உபரதி சப்தத்தின் முக்கியார்த்தமாம். உபரதி என்னும் பதத்திற்கு சந்யாசம் என்பது பொருளாதலால் அச்சந்யாசம் ஈண்டு கூறப்பட்டது.)

**சங்கை:**—பிரதானமாக நாம் அடையவேண்டியது வேதாந்த சிரவணமேயல்லவா? அதைச் செய்தல் போதாதோ? அங்கபூதமாகிய அப்பியாசமேன்?

**சமாதானம்:**—பிரதானகாரியம் (அங்கி) சித்திப்பதற்காக அங்கபூதம் (அப்பியாசம்) அவசியம் அனுசரிக்கப்படவேண்டும். அங்கம் லோபமானல் (சரியாகச் செய்யப்படாவிட்டால்) பிரதானவஸ்து சித்திக்காது. (இது உலகானுபவத்தில் பிரசித்தம்.) ஆகையால் இவ்வுலகத்தும் பரலோகத்துமுள்ள விஷய போகங்களினின்று நன்ருய் விரக்தி யடைந்தவனுய்ச் சந்யாசங்கொள்ளவேண்டும். விரக்தி யில்லாதவன் கொள்ளும் சந்யாசம் நிஷ்பலமாம். சந்யாசங் கொண்டபின்பு பூர்வ விஷயங்களை நினைத்தலுங் கூடாது.

## சிரத்தை.

(சமாதி யாறனுள் உபரதிக்குப் பின்னதாகிய சிரத்தை நிரூபிக்கப்படுகின்றது.) குருவாக்கியங்களினிடத்தும் வேதாந்த வாக்கியங்களினிடத்தும் இவை சத்தியமாம் (உண்மை) என்னும் நிச்சயவடிவ புத்தி எதுவோ அது சிரத்தையாம். சிரத்தையுடையவர்களுக்கே முத்தி சித்திக்குமன்றி அஃதிலார்க்குச் சித்தியாது. வேதமும் 'சௌம்யா! சூக்ஷ்மமாகிய தத்துவஞானம் உனக்குக் கூறப்பட்டது. இதில் சிரத்தைவை' எனக் கூறுகின்றது. சிரத்தையில்லாதவனுக்குப் பிரவிர்த்தி யுண்டாதலில்லை. பிரவிர்த்தி யில்லாவிட்டால் காரியம் கைகூடாது. சகலரும் அசிரத்தையால் அடிபட்டே சம்சாரமாகிய பெருங்கடலில் ஆழ்கின்றனர். தெய்வத்தினிடத்திலும் வேதத்தினிடத்திலும் குருவினிடத்திலும் மந்திரத்தினிடத்திலும் தீர்த்தத்தினிடத்திலும் பெரியோரிடத்திலும் ஒருவன் எவ்வளவு நம்பிக்கை (சிரத்தை) யுடையவனையிருக்கிருனே அதற்குத் தக்கபடியே பலனுண்டாகும். பரப்பிரம்ம மிருக்கிறது என்னும் நிச்சயபுத்தியாலுண்டாகும் நம்பிக்கையில்லாவிடில் அதையறிதல் சம்பவியாது. அப்படி அந்த வஸ்து இருக்கிறது என்னும் நம்பிக்கையும் சாஸ்திரத்தினிடத்தில் நம்பிக்கையிருந்தால்தான் உண்டாகும். இல்லா

விட்டால் அந்த நிச்சயபுத்தி யுண்டாகாது. ஆகையால் குருவாக்கியத்திலும் வேதாந்த வாக்கியத்திலும் மிருந்த நம்பிக்கையைக்கொண்டிருக்கவேண்டும். சிரத்தையுள்ள முமுக்ஷுவிற்கே மோக்ஷரூபமாகிய பலன் சித்திக்கும். சிரத்தையில்லாவிடின் சித்தியாது.

ஒருவன் மற்றொருவன் வார்த்தையை நம்பவேண்டுமாயின் அந்த வார்த்தையைச் சொல்பவன் உண்மையாளனென்று (மெய்யே பேசுவான் பொய் பேசமாட்டான் என்று) தெரிந்தால்தான் நம்பிக்கை யுண்டாகும். எப்பொழுதும் உண்மையே பேசுவோனுடைய வார்த்தையில்தான் யாவருக்கும் நம்பிக்கை யுண்டாகுமல்லவா? அதுபோல, வேதமானது ஈஸ்வரவாக்கியமாகலின், அது உண்மையென்பதற்கு எள்ளளவும் ஐயமில்லை. இனி, குருவின் வாக்கியத்தில் எப்படி நம்பிக்கை யுண்டாவதெனின், 'முக்தியடைந்தவன் ஈசுவரசொருபன்' ஆகலின் அத்தகைய (ஜீவன் முக்த நிலைமையிலுள்ள) குருவின் வாக்கியமும் ஈசுவரவாக்கியம் போன்றதேயாகும். அதனால் விவேகிகளாகிய சத்புருஷர்களுக்கு வேதாந்த குரு வாக்கியங்களிடத்தில் நம்பிக்கை யுண்டாகின்றது.

## சமாதானம்.

மனத்தை விஷயங்களிற் செல்லவொட்டாமல் தடுத்து ஆத்மவஸ்துவினிடத்தில் நிறுத்துதல் சித்த சமாதானம் எனப்படும். ஏதேனும் ஒரு காரியத்தைச் செய்து முடிக்கவேண்டுமெனக் கருதுவோர் தம் மனத்தை வேறிடங்களிற் செல்லவிடாமல் தடுத்து, தாம் எடுத்துக்கொண்ட காரியத்தினிடத்திற் சிதையாமல் நிலைபெற்றிருக்கச் செய்யவேண்டிய தவசியம். மனம் வேறிடம் சென்றிருந்தால் எவ்வளவு முயற்சிசெய்தாலும் காரியம் கைகூடாது. எல்லா முயற்சிகளும் வீணாகும்.

திருஷ்டாந்தமாக:—ஓர் லக்ஷியத்தை அடிக்க விரும்புகிறவன் தன் மனத்தையும் பார்வையையும் கைகளையும் பாணத்தையும் ஒரே இடத்தில் (அக்குறியில்) அசையாமல் நிறுத்தினால் குறிப்பிட்டதை அடித்து வீழ்த்தலாம். அப்படிக்கின்றிச் சிறிதேனும் குறி தவறுமானால் வீழ்த்த முடியுமோ? முடியாது. அதுபோல, ஆத்மாவை யறிய விரும்புவோனுக்குச் சித்த சமாதானம் அவசியமென்றறியவேண்டும். ஆகையால் காரியசித்திக்கு முக்கிய காரணமாயிருப்பதால் சமாதானமானது மோக்ஷாபேக்ஷையுள்ளவர்களுக்கு அவசியமாயிருத்தல் வேண்டும். இந்தச் சமாதான முண்டாகவேண்டுமாயின், மிக்க தீவிரமான விரக்தியும் பலனை யடையவேண்டுமென்னும் பேராவலும் இருக்கவேண்டும். இந்த இரண்டுமிருந்தால் சமாதானம் உண்டாகும். ஆகவே சித்தசமாதானத்திற்கு மேற்கூறிய இரண்டுமே முக்கியகாரணங்களாம்.

இதுகாறும் கூறிய சமாதியாறும் முக்தியடைவதற்கு முக்கிய சாதனங்களாம். வேதமானது பிரம்மசரியம் முதலானவைகளையும் முக்தி சாதனமெனக் கூறியிருப்பினும் அவையெல்லாம் பகிரங்கசாதனங்களேயாம். இச் சமாதிஷட்கமே அந்தரங்க சாதனமெனப் பெரியோர் அபிப்பிராயப்படுகின்றனர். பகிரங்கத்தைவிட அந்தரங்கமே சிறந்ததாகலின் ஞானத்தையடைய விரும்புவோர் சமாதிஷட்க சம்பத்தியை முக்கியமாகக் கொள்ளவேண்டும். போர்வீரனுக்குத் தைரியமொன்றுமட்டு மில்லாவிட்டால் அவன் எவ்வளவு ஆயுதங்களை வைத்திருந்தாலும் யாது பயன்? ஒன்றுமில்லை. அதுபோல, அந்தரங்க சாதனமான இந்தச் சமாதிஷட்க சம்பத்தியை யடையாதவன் எவ்வளவு சிரவணம் செய்தாலும் பயனில்லை.

(தொடரும்) பூ. ஸ்ரீநிவாசன், தமிழ்ப்பண்டிதர், சித்தூர்.



# ஆரியசித்தாந்தம்.

(158-ம் பக்கத் தொடர்ச்சி)

## சமாதி.

இனி சமாதி கூறவேண்டும். இச்சமாதியில் பிரத்தியாகாராதிகளும் அடங்கும். பிரத்தியாகாராதி சொரூபமே சமாதி யென்பதாம். யோக சாதனைகளுக்குள் சமாதியே சிறந்தது. ஆசனம் முத்திரைகளெல்லாம் இதற்கு அனுசரணையாயிருப்பவை என்பர். ஆசன கும்பக முத்திரைகள் சித்தித்தபின் சமாதி யனுஷ்டிக்கத்தக்கது. இதுவே ஜீவன் முத்திதருவது. ஆனந்தமளிப்பது. மரணத்தை ஒழிப்பது. ஜீவன் முத்தி என்பது சரீரத்துடனிருக்கும்போதே சுகதுக்காதிகள் ஒழிந்து பரமானந்த சொரூபியாயிருப்பது. இவன் சமாதியிலிருக்கும்போதும், ஜாக்கிராவஸ்தையில் இருக்கும் போதும் பிரமத்திலேயே லயித்து, எங்கும் பிரமமயமாகக் காண்பான். ஆதலால் இவனுக்குச் சுகதுக்கங்கள் இல்லை.

நீரிலிட்ட உப்பு கரைந்துபோனபின் உப்பும் நீரும் ஒன்றாய்க் கலப்பது போல மனமும் பிரமமும் கலப்பது சமாதியாம். இதனால் ஜீவாத்மாவும் பரமாத்மாவும் ஒன்றாய்க் கலப்பது சமாதியாம். பிராணனும் மனதும் செயலற்று ஒடுங்குவது சமாதியாம். ஆகவே பிராணனும் மனதும் ஒடுங்கி ஜீவ பரமாத்மா இரண்டும் ஐக்கியமாவது சமாதி என்பது புலப்படும். இந்தச் சமாதி குண்டலிசக்தியைப் பிரயத்தனத்தினால் விழிக்கச் செய்தவனுக்கே சித்தியாகும். ஏனெனில் குண்டலிசக்தி நித்திரையைவிட்டு விழித்திருக்கும் போதுதான் பிராணவாயு சுழுமுனையாகிய பிரமரந்திரத்தில் பிரவேசிக்கும். அப்போது அந்தக்கரணம் பிரமத்தில் ஒடுங்கும். அதனால் சித்தம் அசைவற்றிருக்கும். இங்ஙனம் சித்திபெற்ற யோகிக்குப் பிராரப்தாதி கர்மங்கள் நசிக்கும். பிராரப்தகர்மம் நசிக்கவே அந்த யோகியிடத்தில் காலன் அணுகான். இவ்வாறு அப்பியாசித்துச் சித்திபெற்ற யோகிக்குத்தான் அமரோலி வஜ்ரோலிகள் சித்திக்கும். ஏனையர்க்குச் சித்தியாகாது. இதனால் பிராணனையும் சித்தத்தையும் ஜயிக்கப்பெற்றவனுக்குத்தான் வஜ்ரோலி அமரோலிகள் சித்திக்கும் என்றதாயிற்று.

இடைகலை பிங்கலையிற் செல்லுதல் பிராணவாயுவின் இயற்கைத் தொழில்; விஷயங்களைப் பற்றுதல் புலன்களின் இயற்கைத்தொழில்; விஷய விருத்தியுண்டாதல் மனத்தின் இயர்கைத்தொழில். இவை தத்தம் தொழிலைச் செய்யாதிருப்பது அவற்றின் இலாபமாம். இந்தப் பிராண மனோலய முண்டாகாதபோது பரமாத்மாவை யறிய முடியாது. பிராணன் ஒடுங்கினால்தான் மனம் ஒடுங்கும். மனமொடுங்குதலே ஞானமாம். இந்த ஞானம் சித்தியாதபோது மோட்சம் அடையப்படாது. இந்த ஞானசித்தி யோக மார்க்கத்தாலன்றி அடையப்படுவதில்லை. ஞானமின்றி மோட்சமில்லை. இது பற்றியே சரியை, கிரியை, யோகம், ஞானம் என்று மோட்சசாதனமார்க்க முறை கூறப்பட்டதென்க. தலை கழுத்து உடல் இம்மூன்றும் நிமிர்ந்திருக்க இருந்து மன இந்திரியங்களை இருதயத்தில் செலுத்தினால் பிரமதரிசனம் எளிதிலாகும் என்பது நூல்களின் கருத்து. பிரணவசொரூபமாகப் பிரமதியா

னம் செய்யவேண்டும். பிரம க்ஷத்திரிய வைசிய சூத்திரர்களுக்கும், ஸ்திரீகளுக்கும் இந்த யோகமே மோட்ச மார்க்கமாம். இதையன்றி வேறு மார்க்கமில்லை.

அறிவுள்ளவனானாலும், படித்தவனானாலும் படியாதவனானாலும் ஸ்திரீகளானாலும் எத்தன்மையாயினும் இந்தயோகமார்க்கத்தை அனுஷ்டித்தால் அவர்கள் பரகதியை அடைவார்கள். இந்த மார்க்கத்தை யறியாதவர்கள் ஜனன மரணங்களைக் காக்கமாட்டார்கள் என்று வியாசர் கூறினார். கண்ணபிரானும் மனமடங்கிய யோகியானவன் நிர்வாணமென்னும் எனது நிலையை அடைகிறான் என்று கூறினார். பிரமஞானத்தால் முத்திகிட்டும்; அந்த ஞானம் யோகமின்றிக் கிட்டாது. யோகமோ நெடுங்கால அப்பியாசத்தினாலன்றிக் கிட்டாது என்று ஸ்காந்தபுராணம் கூறிற்று. யோகத்தானத்தால் ஞானம் பிறக்கும். யோகமென்பது பிரமத்தினிடத்தில் ஐக்கியப்பட்ட மன முடைமையாமென்று ஆதித்தபுராணம் கூறுகின்றது. யோகாக்கினி பாபக் கூட்டங்களை யெரிக்கும். அதனாலே ஞானமுண்டாகும். அந்த ஞானம் மோட்சத்தைத் தரும் என்று கூர்மபுராணம் கூறுகின்றது. அறிவுள்ளவன் மோட்சானந்தத்தை அடையும்படி முயற்சிக்கவேண்டும். அந்த முயற்சி யோகமேயாம். வேறொன்றினாலும் முக்தி அடையப்படுகிறதில்லை. தாபத்திரயங்களினாலே தகிக்கப்படுகிற நரர்களுக்கு யோகமே பரம ஔஷதமாகும். உலகத்தை வெறுத்துப் பரப்பிரமத்தை அடைய விரும்புகிறவனுக்குத் துக்கம் நீங்கி நிர்வாணசுக முண்டாகிறது. யோகத்தில் பூர்ணசித்திபெற்ற நரன் பரப்பிரமத்தை எங்கும் காண்பான். அவனுக்கு வேறொன்றும் தோன்றுவதில்லை. அவன் பிரமானந்த சுகத்தை யடைந்தவனாவான். அதனால் எல்லாவற்றிலும் வெறுப்புத் தோன்றும். இந்திரியங்களைத் தவத்தால் அடக்கிய யோகி யோகத்தினாலே சம்சாரமாகிய மஹாசமுத்திரத்தைத் தாண்டுகிறான் என்று கருடபுராணம் கூறுகின்றது. கபிலர் யோகமே ஸ்திரீ புருஷர்களுக்கும் எல்லார்க்கும் பெருமையையும் சுகத்தையும் தருவதாகு மென்றார். சம்சாரமென்னும் விஷவேகமானது யோகமென்னும் காருடமந்திரத்தினால் நிவிர்த்தியாமென்று வசிஷ்டர் இராமருக் குபதேசித்தார்.

உமை மஹாதேவனை நோக்கிக் கருணைக்கடலே மஹேசா! மரிக்கின்ற ஞானிகளின் நிலைமை எப்படியிருக்கும், அருள்புரியவேண்டும் என்று வினவினாள். ஈசன், உமையே! அவர்கள் மரித்தபின் தத்தம் புண்ணியபாவங்களின் பலனை அடைகிறார்கள். அதை அனுபவித்தபின் அந்த ஞானி மறுபடியும்பிறப்பான். பின் புண்ணியபலனால் சித்தர்களுடன் சேர்வான். அவன் யோகியேயாவான். அவனுக்குச் சம்சாரம் நசிக்கும் என்றார். உமை, ஞானத்தினாலேயே மோட்சமுண்டாகும் என்று ஞானிகள் கூறுகின்றார்களே, யோகம் மோட்சத்தைத்தரும் என்பது எப்படி? என்றாள். ஈசன், ஞானத்தினால் மோட்சமென்பது மெய்யே. யோகமின்றி மோட்சசாதனமான ஞானமுண்டாவதில்லை என்றார். உமை, ஜனகாதியர் யோகமில்லாமலே ஞானத்தையும் மோட்சத்தையும் அடைந்தார்கள் என்பதெப்படி? என்றாள். ஈசன், பூர்வஜன்மங்களில் அவர்கள் யோகானுஷ்டானம் செய்து ஞானம் பெற்றவர்கள் என்று புராணங்களில் கூறப்பட்டுள்ளது. அதுவே யுண்மையாம். முன் ஜன்மத்தில் செய்த புண்ணியபலத்தினால் அவர்கள் பிரம க்ஷத்திரிய வைசிய சூத்திரர்களாக ஜனித்துக் கிரமமாக முக்தியை அடைந்தார்கள். யோகத்துக்கு அந்தக்கிரமமில்லை. யாரும் அனுஷ்டிக்கலாம். யோகத்தில் நின்று நழுவினவன் மஹா ஐசுவரியவான் வீட்டிலாவது, மற்றொரு யோகியின் வீட்டிலாவது பிறப்பான். பிறந்து ஞானமெய்தி முக்தி பெறுவான். எல்லாரும் யோகத்தில் பழகி முக்திபெறலாம்.

*

தகுதியான இடத்திலிருந்துகொண்டு சுழுமுனையை நிலைநிறுத்துந் தன்மையைக் குருவினால் தெரிந்துகொண்டு பிராணவாயுவை மத்தியிற்செலுத்தி பிரமரந்திரத்தில் பிரவேசிக்கச் செய்யவேண்டும். பிராணன் அசைவற்று நிலைத்தலால் மனமும் அசைவற்று நிற்கும். அப்போது பாவனாவிசேஷத்தால் அந்தக்கரணம் சமாதியோடு கூடுகின்றது. அப்போது பிரமதரிசனம் உண்டாய் அந்த யோகி ஜீவன் முத்தத்தன்மையை அடைகிறான்.

இனி யோகம் பயனற்றதென்றும், பிராணவாயுவை அடக்குதல் ஆசனம் முதலியவைகள் சிலம்பக்காரன் கரடிபழகுதல் போல்வதேயன்றி அது மோட்சம் தாராதென்றும் சாஸ்திரங்களின் உண்மைக்கருத்தறியாத சில வைத்தியர்கள் (வேதாந்திகள்) கூறுவதுண்டு. அவர்கள் ஞானமே மோட்ச காரணமாவதன்றி வேறொன்றும் இல்லை யென்று கூறி யோகிகளைப் பழிப்பார்கள். அவர்கள் வேத உண்மை அறியாதவர்களாவார்கள். சாட்டில் கோத்த ஊசியைப்போலப் பிராணவாயுவில் மனமிருத்தலால் பிராணன் அசைந்தால் மனம் சலியாதிராது. மனம் விஷயப்பற்றில் செல்லாது செயலற்று நிற்பதுதான் ஞானதாரம். அதனால் மனம் பிரமத்துடன் இலயமாம். இலயமாவதே ஞானம்! அதுவே சமாதியாம். சமாதி கூறுவதில் அதன் மகிமையையும் பயனையும் உணர்த்திப் பின்பு அதனைக் கூறவேண்டுதலால் வேதாகமபுராண இதிகாச ஸ்மிருதிகளால் சமாதியின் பெருமையைச் சிறிது விளக்கினாம்.

ஞானமின்றி மோட்சமில்லையென்பது யாவருக்கும் ஒப்ப முடிந்ததே. நூல்களின் சம்மதமுமாம். அந்த மெய்ஞ்ஞானம் யோகசாதனை யில்லாதவர்களுக்கு எவ்வகையிலும் சித்தியாகாது. யோகசாதனமின்றி ஞானம் பெறலாமென்று அவர்கள் கூறுவது மலடிமகன் கண்ட கனவு போல்வதாம். சரியை கிரியை யோகம் ஞானமென்று நூல்கள் கூறியதும் இதற்குச் சான்றாம். சரியை கிரியைகளை மனப்பூர்த்தியோடு செய்தவனுக்கே யோகத்தில் பிரவிர்த்தி யுண்டாகும். எவனும் சரியை கிரியைகளில் நின்று யோகத்தை அப்பியாசித்தே மோட்சஞானத்தைப் பெறவேண்டும். இவ்வாறன்றி நான் மனதை அடக்கிவிட்டேன், மெய்ஞ்ஞானத்தை யடைந்துவிட்டேன், பிரமத்தைத் தரிசித்துவிட்டேன், எனக்கு யாதொரு கன்மமும் செய்யவேண்டுவதில்லையென்று பொய்கூறிச் சிலர் இருமையும் இழந்துவிடுகிறார்கள். இது மிகவும் பரிதாபம்.

இதனால் யோகமே மோட்சஞான காரணமாமென்று தெளிந்து நம்மவர்கள் பெருமையை ஒழித்து இறுமாப்பைவிட்டுச் சரியை கிரியைகளை முறையாகச் செய்து ஞானசித்தியை யடையவேண்டுமென்பதே யிதன்கருத்து.

சிலர் பக்தியாலும், சிலர் மந்திர சித்தியாலும் மோட்சம் அடைந்ததாகக் கேட்கப்படுகிறதே யெனின் கண்ணனும் பக்தியோகம், மந்திரயோகம், ஞானயோகம், சாங்கிய யோகமென வகுத்துக்கூறி இவை பூர்வஜன்மத்தில் செய்த தவமகிமையால் முயற்சியின்றியே உண்டாகும் என்றும் கூறுதலால் பூர்வஜன்மங்களில் செய்த யோகப் பயிற்சியால் அவர்களுக்குப் பக்தியாலும், மந்திரஜபத்தாலும் மனம் வசப்பட்டதாமென்று கொள்க. அவ்வாறில்லாதவர்கள் சரியை கிரியைகளையும் யோகத்தையும் அனுஷ்டித்தே ஞானம்பெற வேண்டும் என்பதுதான் நூல்களின் கருத்தும், நூலுணர்ந்த ஆன்றோர்களின் கருத்துமாம். ஆதலால் மோட்சத்தை விரும்புகிறவர்கள் யோகப் பயிற்சி செய்தே ஞானம் பெறவேண்டுமென்க. இனி சமாதிக்கிரமம் வருமாறு.

(தொடரும்.) **சிவானந்தசாகர யோகீஸ்வரர்.**

சிவமயம்




## எறிபத்தநாயனார் புராணத்தின் சில விசேடக் குறிப்புகள்.

(160-ம் பக்கத் தொடர்ச்சி.)

'குருவை வெள்விடைப்பாகனை யன்பரைக் கும்பிடா திகழ்ந்தோரைக்
கருவி யாற்குறைத் திடல்கொலை யன்றது கைவரல் வலியின்றேல்
வெருவி வெங்கிர யம்புகச் சபித்தவர் மேவிய மூதூரை
யொருவி வேறொரு புலத்திடை யருந்தவ முஞற்றுதல் வழக்காமால்''

(கருவூர்ப்புராணம்-கோபிதாரத்துவச் சருக்கம்-91)

என்னுஞ் செய்யுட்களால் இவற்றை யுணரலாம்.

இவைபற்றியன்றோ பாதகமென்றும் பழியென்றும் பாராது, தாதையை வேதியனைத் தாளிரண்டுமாணி சேதிப்பக் கண்டு ஈசர் தாமாம் பரிசளித்துச் சண்டீசர் பதத்தை யளித்தார். இதனை,

"வந்து மிகைசெய் தாதைதாண் மழுவாற் றுணித்த மறைச்சிறுவ
ரந்த வுடம்பு தன்னுடனே யரனார் மகனா ராயினார்''

(பெரியபுரா-சண்டேசநாயனார்-59.)

என்றும்,

" கருதுங் கடிசேர்ந்த வெனுந் திருப் பாட்டி லீசர்
மருவும் பெரும்பூசை மறுத்தவர்க் கோறன் முத்தி
தருதன் மையதாதல் சண்டீசர் தஞ்செய்கை தக்கோர்
பெரிதுஞ் சொலக்கேட் டனமென்றனர் பிள்ளை யார்தாம்.

(திருஞானசம்பந்தநாயனார் புராணம்-839.)

என்றும், சேக்கிழார் பெருமானும்,

"பீரடைந்த பாலதாட்டப் பேணுதவன் றாதை
வேரடைந்து பாய்ந்த தாளை வேர்த்தடிந்தான் றனக்குத்
தாரடைந்த மாலைசூட்டித் தலைமை வகுத்த தென்னே
சீரடைந்த கோயின்மல்கு சேய்ஞலூர் மேயவனே''

(திருஞான சம்பந்தர் தேவாரம்-திருச்சேய்ஞலூர்-7.)

என்றும்,

"கடிசேர்ந்த போது மலரானகைக் கொண்டு நல்ல
படிசேர்ந்த பால்கொண்டங் காட்டிடத் தாதைபண்டு
முடிசேர்ந்த காலை யறவெட்டிட முக்கண் மூர்த்தி
யடிசேர்ந்த வண்ண மறிவார் சொலக் கேட்டுமன்றே''

(திருஞானசம்பந்தர் தேவாரம்-பொது-7.)

என்றும் ஆளுடைய பிள்ளையாரும்,

“ தழைத்ததோ ராத்தி யின்கீழ்த் தாபர மணலாற் கூப்பி
யழைத்தங்கே யாவின் பாலைக் கறந்துகொண் டாட்டக் கண்டு
பிழைத்ததன் றாதை தாளைப் பெருங்கொடு மழுவால் வீசக்
குழைத்ததோ ரமுத மீந்தார் குறுக்கைவீ ரட்ட னாரே ”

(திருநாவுக்கரசர் தேவாரம்-திருக்குறுக்கை-3.)

என்று ஆளுடைய அரசும்,

“ஏதநன்னில மீரறுவேலி யேயர் கோனுற்ற விரும்பிணி தவிர்த்துக்
கோதனங்களின் பால்கறந்தாட்டக் கோலவெண்மணற் சிவன்றன்மேற்சென்ற
தாதைதாளற வெறிந்தசண்டிக்குன் சடை மிசைமல ரருள்செயக் கண்டு
பூதவாளிநின் பொன்னடி யடைந்தேன் பூம் பொழிற்றிருப் புன்கூருளானே”

(சுந்தரமூர்த்திநாயனர் தேவாரம்-திருப்புன்கூர்-3.)

என்று ஆளுடைய நம்பியும்,

“ தீதில்லைமாணி சிவகருமஞ் சிதைத்தானைச்
சாதியும் வேதியன் றாதைதனைத் தாளிரண்டுஞ்
சேதிப்ப வீசன் றிருவருளாற் றேவர் தொழ
பாதகமே சோறு பற்றினவா தோணோக்கம்”

(திருவாசகம்-திருத்தோணோக்கம்-7)

என்று ஆளுடைய அடிகளும்,

“ தாதையைத் தாளறவீசிய சண்டிக்கு மண்டத்தொடு முடனே
பூதலத்தோரும் வணங்கப் பொற்கோயிலும் போனகமுமருளிச்
சோதி மணிமுடித்தாமமு நாமமுந் தொண்டர்க்கு நாயகமும்
பாதகத்துக்குப் பரிசுவைத்தானுக்கே பல்லாண்டு கூறுதுமே”

(சேந்தனர் திருப்பல்லாண்டு-10.)

என்று சேந்தனாரும் கூறிப் புகழ்ந்திருக்கின்றார்கள்.

எறிபத்தநாயனர்,

“ அழலவிர் சடையா னன்பர்க் கடாதன வடுத்த போது
முழையரி யென்னத் தோன்றி முரண்கெட வெறிந்து தீர்க்கும்
பழமறை பரசுந் தூய பரசை”க் கைக் கொண்டதும்,

சிவகாமியாண்டாரும் தாம் சிவபெருமானுக்குச் சாத்தக் கொண்டுபோகும் புட்பங்களை யானையானது பறித்துச் சிந்தியபோது,

“ நூல்கொண்ட மார்பிற்றொண்டர் நோக்கினர் பதைத்துப் பொங்கி
மால்கொண்ட களிற்றின் பின்பு தண்டுகொண் டடிக்க ”

வந்ததும்,

“ அப்பொழு தணையவொட்டா தடற்களி றகன்று போக
மெய்ப்பெருந் தொண்டர் மூப்பால் விரைந்துபின் செல்லமாட்டார்
தப்பினர் விழுந்து கையாற் றரையடித் தெழுந்து நின்று
செப்பருந்துயர நீடிச் செயிர்த்துமுன் சிவதா ”

எனப் புலம்பியதும்,

அதனைக் கேட்ட எறிபத்தநாயனாரும் ஆற்றாது ஓடிவந்து வினவிய போழ்து,

“ எந்தையார் சாத்தும் பூவை யென்கையிற் பறித்து மண்மேற்
சிந்திமுன் பிழைத்துப் போகா நின்றதித் தெருவே”

என்றதும்,

அதனைக்கேட்ட எறிபத்தநாயனார் சீற்றமிகுந்து,

"இங்கது பிழைப்பதெங்கே யினியென வோடி"

யானையைப் பாகர்களுடன் மழுவால் துண்டித்ததும்,

எறிபத்த நாயனாரால் 'பட்டத்து யானை கொல்லப்பட்டதை யறிந்த புகழ்ச்சோழர்

"மறிந்த விக்களிற்றின் குற்றம் பாகரோ டிதனை மாள
வெறிந்த போது மோதானருள் செய"

மென எறிபத்த நாயனாரை வினவி நின்றதும்,

அங்ஙனம் கொல்வதும், எறிபத்த நாயனாரது மங்கல மழுவாலாகா தென்று தமதுடைவாளை எறிபத்தநாயனாரிடங் கொடுத்ததும், கொடுத்த வாளை வாங்காதிருந்தால் புகழ்ச்சோழர் தன்னைத்தானே துணிக்க நேருவ ரென்றஞ்சி அதனைவாங்கி, புகழச்சோழரது அன்புத்திறத்திற்கு வியப்புற்று, இத்தகைய அன்பருக்குத் தீங்கு நினைத்தேனே என வருந்தித் தமது கழுத்தைத் துணித்தற்கு வாளைக் கழுத்திற் பூட்டியதும், முன்னர் கூறப்பட்ட சிவத்துரோகம் முதலிய அதிபாதகங்களைச் செய்வோரைக் கொல்வது குற்றமாகாதென்பதை வலியுறுத்துகின்றன.

(தொடரும்) பஞ்சாட்சரபுரம், வாலையாநந்தம்

---

# ஆனந்தபோதினி

## நீதி யானந்தக் களிப்பு.

### காப்பு.

வாக்குண்டா மானந்த போதினியின் மாவின்பத்
தேக்குண்டாஞ் செங்கமலத் தேவியினன்—நோக்குண்டாம்
துப்பார் திருமேனித் தும்பிக்கை யான்பாதம்
தப்பாமற் சார்வார் தமக்கு.

சங்கர சங்கர சம்பு - சிவ
சங்கர சங்கர சம்பு

ஆனந்த போதினி சங்கம் - நமக்
கானந்த மாயறிவாய்நின்றிலங்கும் - பே
ரானந்த மாநெறி காட்டும் - நமக்
கானநூ லின்பயன் நன்குகைகூட்டும் (சங்கர)

நல்ல வழிதனில் நின்று - வரும்
நல்வினை தீவினை யெல்லா மொன்றென்று
சொல்லுஞ் சுருதி பயின்று - பரஞ்
சோதி யருள்பெறச் செய்யுமே நன்று (சங்கர)

ஞானப் பொறுமையைத் தாங்கி - நன்
நலந்தருஞ் ஜோதியைக் காணலாம் ஓங்கி
ஆனந்தபோதினி யோதி - வந்தால்
ஆளலாம் உற்சாக மாகநன் நீதி. (சங்கர)

ச. மூக்கமுத்திரியர், அரசலூர்.



# வைணவம்

## ஸ்ரீ ஆண்டாள்.

(117-ம் பக்கத் தொடர்ச்சி.)

புத்திர வாத்சல்யத்தால் யசோதைப் பிராட்டியாரும், திருமேனியின் சௌந்தரியத்தில் ஈடுபட்ட காதலால் கோபிகைகளும் ஸ்ரீகண்ணனைச் சேரவைத்த பிரேமையோ பேசரிது. அவ்வருமையைத் தந்தையார் பேசக் கேட்டிருந்த கோதையார், அப்பேச்சே ஆதாரவாக அவன் வடிவைத்தன் மனத்துள் நிறுத்தி, அதனை, அவன்றாயும், தன்னைப்போன்ற கோபிகைகளும் கண்டு களித்தபடியைத் தானுங் காணும் நினைவு கூர்ந்தாள்.

கர்ப்பிணிகளான ஸ்திரீகள், தம்முடைய தண்ணளியால், தாம் இருத்தல், நிற்றல், நடத்தல், கண்வளர்தல் என்னுந் தொடக்கத்துத் தொழில்களைப் பயிலுமிடத்துத் தம் கர்ப்பத்திலிருக்கிற பிள்ளைகளுக்கு நலுக்கம் நண்ணுவகை அக்கருப்பத்தைக் காப்பரன்றே! அன்றியும், பெற்ற பின்னும் அப்பேறுகளின் இன்பதுன்பங்களைத் தம்மனவாக வன்றே அவர்கள் ஆதரித்துத் திரிவதூஉம். அவ்வகையே ஸ்ரீயசோதைப் பிராட்டியும் ஸ்ரீகண்ணனைத் தான் பெற்றாளாகவும் அவன் பிறந்தானாகவும் அன்றே அறிந்திருப்பவள். அவள் கண்ணனைச் சுட்டி,

"ஞாலத்துப் புத்திரனைப் பெற்றார் நங்கைமீர் நானே மற்றாருமில்லை"
(பெரியாழ்-திரு. 3-ப-3-திரு-1பா)

எனப் பேசுதலாலே கண்ணன்பாற் சென்று தேங்கிக் கிடக்கும் அவளுடைய புத்திரவாத்சல்யம் உணர்தற்கும் உரைத்தற்கும் அரியதொன்றென்பது தோன்றக் கிடக்கின்றதன்றே! பிராமணர்க்கு பால்யத்தில் பிர்மசரியமும், மேல் கிருகஸ்தமும் அனுஷ்டிக்கை தர்மமேபோல் இடையர்க்கும் இளம்பருவத்திலே கன்றுகள் மேய்க்கையும், பருவம் வந்தவாறே பசுநிரை மேய்க்கையும் ஜாதி தர்மமாகுமல்லவா? ஸ்ரீகண்ணனும் அசதன்மத்தை அனுஷ்டிப்பானாகப் பிராட்டியார், அவனைக் கன்றின்பின் போக்குவாள். எனினும் அடுத்து, அவனுடைய மேனியின் மிருதுத்தன்மையையும் அவன் போகின்ற விடத்தின் கொடுமையையும், பச்சை கண்டவழி ஓடித்திரியும், காலிகளின் சுபாவத்தையும், அச்சுபாவத் தவை செல்லும் வழியே என்றும் தனக்கு இனிய கோவலச்சிறுவள் செல்லவிருப்பதையும் நினைந்து நினைந்து நெஞ்சம் புண்ணுவள். அஃதன்றியும் அவள் குடையுஞ் செருப்புங் கொடாதே தாமோதரனை,

"பொன்னடி நோவப் புலரியே கானிற் கன்றின்பின்
என்னிளஞ் சிங்கத்தைப் போக்கினேன் எல்லேபாவமே"
(பெரியாழ்-திரு-3-ப-2-திரு-8-பா)

என ஏங்குவாள். அவளுக்கு வந்த எக்கம் இல்லையாக மாலைப்பொழுதில் கன்றுகள் முன்னாக ஸ்ரீகண்ணன் நின்று தன்வரவு பார்த்திருக்குந் தன்தாய்க்குத் தனது முகங்காட்டி நிற்பான். அதுகாலை யசோதை தனதுகண்ணிற்கும் மனத்திற்கும் இனியானைக் கண்டு பெரிதும் மகிழ்வாள். என்றாலும் அடுத்து, கன்றுகள் கால் பாய்ச்சியும், கழுத்தெடுத்தும், வால்நீட்டியும் வேகமெடுத்துப் பரந்து செல்லுதலால் எழுந்த தூகள் அவனுடைய திருமேனியில் படிந்திருத்தலையும், திருவடிகளும் கண்களும் முறையே வெதும்பியும் சிவந்து மிருத்தலையும், திருமேனி வாடியிருத்தலையும், குறுவியர்வை முகத்தரும்பியிருத்தலையும் கண்டு காலிப் பின்னே தன்னிளஞ் சிறுகுட்டனைச் செலுத்துகையைத் தவிர்க்கைக்கு நினைப்பவளாய்,

"கண்ணா நீ நாளைத்தொட்டுக் கன்றின்பின் போகேல்
கோலஞ்செய் திங்கேயிரு" (பெரியாழ்-திரு-3-ப-3-திரு-9-பா)

எனவும் பேசியிருப்பள். பின்னும் அவள், அவனுடைய காதைப் பெருக்க வேண்டி அவனிரு காதுகளிலும் சீலைக்குதம்பை (துணிச்சுருட்டு) இட்டு விடுப்பாளாகவும், தாய் இடுங்காலையில்,

"காரிகையார்க்கும் உனக்கும் இழுக்குற்
றென்காதுகள் வீங்கி யெரியில்" (பெரியாழ்-2-ப-3-தி-10-பா)

என்னும் தாயைத் தன்வயப்படுத்துஞ் சொல்லை மிழற்றிய எம்பெருமான், ஒரு காதிடத்துத் திரியைச் சடக்கெனக் கழற்றி யப்பால் போகட்டுவிட்டு அத்திரியிருந்தவிடத்தே காட்டகத்தே மலர்ந்த சிவந்த நிறத்தையுடைய மேல்தோன்றிப்பூ (செங்காந்தள்பூ) வை யிட்டுக்கொண்டு வருவான். அன்றியும் அவன், தன் திருமேனிக்குத் தகுதியாகச் சாத்தின பரியட்டத்தோடும் அது நழுவாதபடி அதன்மே லிறுகப்பிணித்த விளங்குதலமைந்த அரைக்கச்சோடும், அவள் அலங்கரித்து விட்ட அடைவே குலையாமலும் வருவான். பின்னும் அத்தோன்றல், நல்ல நீர்மையையுடைய முத்தாலே சமைக்கப் பட்டதாய்க் கழுத்திலே சாத்தப்பட்டதாய் காளையன்ன நடைகொள்ளுமிடத்து இடம் வலங்கொண்டு அசைவதான ஆரத்தோடும் தன்னைக் காணாதலால் தாய் முகந்தழைக்க முகத்தே முறுவல்கூட்டிக் குதித்துக் குதூகலித்து வருவான். இவ்வகையில் தன்துயர் கெடுக்கும் கடல்வண்ணங்கொண்ட மிடுக்கன பாய்ந்து ஆர்த்து வருகைகண்டு, தான் அடையும் ஆனந்தத்தைப் பிறரும் அடையும் ஆதாவுமிக்க அன்னையார்

"சீலைக் குதம்பை யொருகா தொருகாது செந்நிற *மேற் றோன்றிப்பூக்
கோலப்பணைக் கச்சுங் கூறையுடையும் குளிர்முத்தின் †கோடாலமும்
காலிப்பின்னே வருகின்ற கடல்வண்ணன் வேடத்தை வந்து காணீர்"
(பெரியாழ்-திரு-3-ப-3-திரு-1-பா)

என்று அவன் வேடத்தைப் பிறர்க்குக் காட்டித் தனக்குக் கண்ணனிடத்துள்ள புத்திரவாத்சல்யத்தால் தலையெடுத்த பிரேமையினைப் புலப்படுத்தி உள்ளம் பூரிப்பாள்.

தன் பொலிவுகண்டு தாய் உடல் பூரிக்கப் பிறந்த புனிதமூர்த்தியாகும் வசுதேவகுமாரன், வண்டுமலர்க்குழலார் கோபிகைகளும் தன்பக்கல் காதற் பெருகால் பிரேமை மிகுதியுங்கொள்ளத்தக்க கோலமும் கொள்கைகளுங் கொண்டு விளங்கினன்.

(தொடரும்) N. திருவேங்கடத்தையங்கார்.

* செங்காந்தள். † பிறைபோல் வளைந்த ஹாரம்.






## ஆத்திசூடி உதாரணக்கதைகள்.

(164-ம் பக்கத் தொடர்ச்சி.)

### "கைவினை கரவேல்"

"கைவினை—(மனிதனே! நீ உனக்குத் தெரிந்த) கைத்தொழிலை, கரவேல்—(தக்க சமயத்தில்) ஒளிக்காதே" என்பது இதன்பொருள்.

அருமையான கைத்தொழில்களைக் கற்றுக்கொண்டவர்கள் எந்த இடத்திலும், எந்தச் சமயத்திலும, எக்காரணத்தைககொண்டும் மறைக்கக்கூடாது. அங்ஙனம் மறைக்காமற் செய்துவந்தால் அவர்களுக்குப் பலரிடத்திலும் நன்மதிப்பும், மிக்க ஊதியமும் கிடைக்கும். தமக்குத் தெரிந்த தொழில்களை மறைப்பவர்க்கோ அவமதிப்பும், வரும்படிக் குறைவுமுண்டாகும். பலரும் அவர்களை வெறுப்பார்கள். அவர்களுடைய தொழில் வல்லமைக்கும் சிறப்பில்லாமற் போய்விடும். இவ்வாறு, தமக்குத் தெரிந்த தொழில்களை மறைப்பவர்க்குக் கேடுண்டாமென்பதற் குதாரணமாக ஒரு கதையுண்டு:

ஒரு நகரத்தில் நெசவுத் தொழிலில் வல்லவனொருவனிருந்தான். அவனுககு நெசவு சம்பந்தமான சகல தொழில்களும் தெரியும்; எந்த ஆடையைப் பார்த்தாலும் அதைப்போல் நெய்துவிடும் சாமர்த்தியம் அவனிடத்தில் அமைந்திருந்தது. அவன், அவ்வாறு அத்தொழிலிற் சிறந்தவனாயிருந்தும் அவ்வூரிலுள்ள மனிதர்கள் தொழில் அருமை தெரியாதவர்களா யிருந்தபடியால அவர்களில் எவரும் அவனை ஆதரிக்கவில்லை. அதனால் அவனுக்கு எவ்வித வரும்படியும் இல்லாமலிருந்தது. அவன் பிழைக்க வழியின்றிப் பெருந்துன்பப்பட்டான்; மிகுந்த பேராசைக்காரனாதலால் கையில் பணஞ்சேரவில்லையேயென்று கவலை கொண்டான்.

அவனுடைய நிலைமை அவ்வாறிருக்கும்போது அவ்வூரில் புடவைக் கடை வியாபாரி யொருவரிருந்தார். அவர் பல நாடுகளிலுள்ள ஆடைகளையும் வரவழைத்து விற்றுவந்தார். அப்படி அவர் வியாபாரம் நடத்தி வருங்காலத்தில், நெசவுத தொழிலையும் வைத்துக்கொண்டால் மிக்க இலாபம் சம்பாதிக்கலாமென்று கருதி, மேற்கூறிய நெசவுத்தொழில் வல்லவனை அவ்வேலைக்கு நியமித்து அவன் மூலமாக அததொழிலை நடத்திவந்தார். அவரிடமிருந்து அவனுககு மாதமொன்றுக்கு முட்பது ரூபாய் சம்பளம் கிடைத்தது. அதனால் அவனுடைய பிழைப்புககாரியம் தட்டின்றி நடந்துவந்தது. அவ்வாறு அவனுக்குப் பிழைக்கும் வழி யேற்பட்டவுடனே, அவன் தன்னுடைய பேராசைக் குணத்தால் முன்னே சோற்றுக்குத் திண்டாடியதையும், பின்னர் அந்த

வியாபாரியால் சௌகரியம் ஏற்பட்டதையும் மறந்து, தனக்குக்கிடைக்கும் சம்பளத்திற்குச் சாதாரண ஆடைகளைத்தான் அவருக்கு நெய்து கொடுக்க வேண்டும்; அருமையான வேலைகளையெல்லாம் காட்டக்கூடாது என்று ஒரு கெட்ட தீர்மானத்தைச்செய்து கொண்டிருந்தான்.

அப்படியிருக்கும்போது ஒருசமயம் விநோதமான வேலைப்பாட்டுடன் நெய்யப்பட்ட பெங்களூர்ப் பட்டுத்துண்டு ஒன்று அந்தவியாபாரி கடைக்கு விற்பனைக்கு வந்திருந்தது. அது வியாபாரத்தில் அதிகமாகச் செலவாகக்கூடியதாயிருந்தது. அதனால் அவர், தம்முடைய நெசவுகாரனால் அதேவிதமான பல பட்டுக்குட்டைகளை நெய்வித்து விற்றால் மிகுந்த ஊதியந் தேடலாம் என்று முடிவுசெய்து, அவனிடத்தில் அந்தப் பட்டுக்குட்டையைக்காட்டி "இதைப்போன்ற குட்டைகளை நீ நெய்வாயா?" என்று கேட்டார். அவன், " 'இந்தவேலை எனக்குத் தெரியாது' என்று நாம் சொல்லிவிட்டால், இவர், 'உனக்கு நான் அதிகச்சம்பளம் தருவேன்; இவ்வேலை தெரிந்தால் நீ செய்' என்று கூறுவார்; அதன்மேல் நாம் சம்பளத்தை உயர்த்திக்கொண்டு இந்த அருமையான வேலையைச் செய்யலாம்" என்று தீர்மானித்து அவரிடம், "எனக்கிந்தவேலை தெரியாது" என்று சொன்னான்.

உடனே அந்த வியாபாரி, அவனைநோக்கி, "அப்படி உனக்கந்த வேலை தெரியாவிட்டால் நீ விலகிக்கொள்; நான் அவ்வேலை தெரிந்த வேறொரு ஆசாமியை நெசவுத் தொழிலுக்கு நியமித்துக் கொள்கிறேன்" என்று சொல்லி அவனை விலக்கிவிட்டு வெளியூருக்குப்போய் அவ்வேலை தெரிந்த ஒருவனை அழைத்து வந்து, சம்பளத்துக்கு வைத்துக்கொண்டார். பேராசையால் தொழிலை மறைத்தபேயனுக்குத் தலையில் பேரிடி விழுந்தமாதிரி கலக்கமுண்டாய்விட்டது. அவனுக்கு வேலைபோன மறுதினமே வயிற்றுச் சோற்றுக்குத் திண்டாட்டம் வந்துவிட்டது; அதனால் அவன் பிழைப்புக்காக அங்குமிங்கும் ஓடினான்; ஒரு வழியுமேற்படவில்லை. முடிவில் அவன், "என்னடா! சங்கடம் வந்து விட்டதே! அவரிடத்திலேயே மீண்டும்போய் உண்மையைக் கூறி வேலைக்கமர்ந்து கொள்ளலாம்" என்று அவரிடம்போய், "பெங்களூர்ப் பட்டுக்குட்டை நெய்யும்வேலை எனக்குத் தெரியும்; நீங்கள் என்னை மீண்டும் வேலைக்கு வைத்துக்கொள்ளுங்கள்" என்றான். அவர், "நன்றிகெட்டவனே! நெடு நாட்களாக உன்னை நான் காப்பாற்றி வந்தும் உனக்குத் தெரிந்திருந்த அத்தொழிலை எனக்குக் காட்டாமல் மறைத்துவிட்டு இப்போது எனக்கது தெரியுமென்று சொல்லுகிறாய்; நீ மிகவும் வஞ்சகன்; ஆதலால் என்முன் நில்லாமற் போய்விடு" என்று அவனைத் துரத்திவிட்டார். பின்னர் அவன் எங்கும் வேலை அகப்படாமல் அலைந்து பெருந் துன்பத்திற்காளானான்.

(தொடரும்) சேம்பூர். வீ. ஆறுமுகஞ் சேர்வை.

---

**சந்தாதாரர்களுக்கு:**—சந்தா நம்பர் தெரியாதவர்கள் மாதமாதம் வரும் சஞ்சிகையின் மேலுள்ள விலாசத்தில் குறிக்கப்பட்டிருக்கும் நம்பரைப் பார்த்துக் குறித்து வைத்துக்கொள்ளக் கோருகிறோம்.




# தமிழ் நாட்டுத் தாய்மார்கட்கு ஒரு விண்ணப்பம்.

(167-ம் பக்கத் தொடர்ச்சி.)

ஒருமாதம் ஆனவுடனே குழந்தைக்கு ஊட்டத்தொடங்குவது அன்னிய நாட்டுப் புட்டிப்பால்; சிலமாதங்கள் சென்றதும் முகத்திற் பூசுவது புறநாட்டு வாசனைப்பொடி (Toilet Powder); உண்ணும் பருவம் தொடங்கியதும், கொடுக்கும் தின்பண்டம் அயல்நாடுகளிலிருந்து வரும் பிஸ்கோத்துகள்; உடுக்கும் பருவம் தொடங்கியதும், உடலில் அணிவிப்பது வேற்று நாட்டுத் துணிகளான மல்சட்டைகளும், லேஸ்தைத்த உடுப்புகளும்; விளையாடத் தொடங்கியதும் பிறநாட்டினின்றும் வரும் விளையாட்டுக் கருவிகள்; கல்வி கற்கத்தொடங்கியதும் கற்பிக்கப்படுவன 'A. B C D' எனும் ஆங்கில எழுத்துக்கள். அந்தோ! "நன்மையிலே யுடல் வன்மையிலே—செல்வப் பன்மையிலே மறத்தன்மையிலே—பொன்மயிலொத்திடு மாதர்தங் கற்பின் புகழினிலேயுயர் நாடு—இந்தப்பாருக்குள்ளே நல்லநாடு இந்தப்—பாரதநன்னாடு"—எனப் பாரதியாரால் புகழப்பட்ட இத்திருநாட்டின் பிற்கால வீரர்களாக வரத்தக்க குழந்தைகளை, சின்னஞ்சிறு பருவந்தொட்டே அன்னியப் பொருள்களால் வளர்த்துவரும் கொடுமையை என்னென்பது! என்னென்பது!!

குழந்தை பேச ஆரம்பிப்பதிலிருந்து அதன் அன்னை அதை வளர்த்து வருவதில் மிக்க ஜாக்கிரதையாக இருத்தல் வேண்டும். மனோதத்துவ நிபுணரான Dr. W .A. பாட்ஸ் என்பார் கூறிய சில உரைகள் இங்கு குறிப்பிடத்தக்கன; அவையாவன:—

"குழந்தையிடம் அவன் எவ்வளவு திறமையற்ற-புத்தியற்ற-ஒன்றுக்கு முதவாத மூடன் என்பதை வற்புறுத்திக் கூறுவிடில் பெற்றோர் பலருக்கு ஒரு நிமிஷமேனும் மனச்சமாதானம் இருப்பதில்லை. இத்தகைய முறையினால் குழந்தைகள் தம்மிடம் உண்மையிலேயே திறமையில்லை; தங்களால் ஒன்றும் முடியாது என்று நினைப்பார்கள். அவ்வாறு எண்ணத் தொடங்கும் குழந்தைகள் நன்கு வளர்ச்சியுறுவதில்லை. வாழ்க்கையின் எந்தத் துறையிலும் அவர்கள் தோல்வியே உறுவார்கள். ஓயாது குழந்தைகளிடம் குற்றம் கண்டு பிடிப்பதும், வைவதும், மிகவும் தீமை பயப்பனவாம்" என்பவையே.

மற்றொரு டாக்டர், ஒருசிறந்த பத்திரிகையில் எழுதுவதாவது:—

"குழந்தையை எதிர்மறைக் கட்டளைகளினாலேயே திருத்திவிடமுடியாது. புது வழிகளிற் புகுதல், சுதந்தர இச்சை எனுமிரண்டும் குழந்தையின் குணங்களில் முக்கியமானவையாம். உதாரணமாக, பரீட்சைசெய்து பார்த்ததில், கையில் பாற்கிண்ணம் கொடுக்கப்பட்ட இரு குழந்தைகளில், 'சிந்தாதே'—என்று கட்டளையிடப்பட்ட குழந்தை பலமுறை சிந்திக்கொண்டே வந்தது; 'ஜாக்கிரதையாய்க் கொண்டுவா'—என்று சொல்லப்பட்ட குழந்தை ஒருமுறைகூடச் சிந்தாமல் கொண்டுவந்தது" என்பதே.

மேற்கண்ட இரு அனுபவ உரைகட்கு விரிவுரை வேண்டுவதில்லையாத

லின் மேற்செல்வேன். குழந்தைகளுக்குப் பயங்காட்டுதலும், அச்சந்தருங் கதைகளைக் கூறுதலும் நாளடைவில் அவர்களைக் கோழைகளாகவும், பயங் கொள்ளிகளாகவும் செய்துவிடக் கூடியனவாம். ஆதலால், பளிங்குபோன்ற மாசற்ற அவர்களது மனத்திற் பதியுமாறு வீரரசம் பொருந்தியனவும், உத் ஸாக மூட்டுவனவுமாய நற்கதைகளையே கூறுவதோடு, எப்பொழுதும் சந் தோஷகரமான முகத்துடனேயே அவர்களோடு உரையாடுதல் வேண்டும். காந்தியடிகள் இவற்றைப்பற்றிக் கூறியிருக்கும் பொன்மொழிகள் இங்கு, கவ னிக்கத் தக்கனவாம். அவையாவன:—

"பயமுறுத்துவதும், அடிப்பதும், வயிறு கொண்டமட்டும் உணவைத் திணிப்பதும், குழந்தையின் அறிவைக் கெடுத்துவிடும். பெற்றோர் கெட்ட வார்த்தைகளை உபயோகித்தாலும், கெட்ட பழக்கங்களுடையவர்களாக இருந்தாலும், குழந்தைகளும் அவற்றை அப்யசிக்கும்; பிறகு அவர்களிடம் கெட்ட நடத்தை படிந்து போய்விடும். ஆதலால், குழந்தைகள் யோக்கியர் களும், உண்மை பேசுகிறவர்களுமாகுமாறு அவர்களுக்கு நற்புத்திகளைக் கற் பிக்கவேண்டியது பெற்றோர்களின் முதற்கடமை." என்பனவாம்.

இனி, குழந்தைகளை பள்ளிகட்கு அனுப்புவதைப்பற்றிச் சிறிது கூற வேண்டியிருக்கிறது. அன்னைமீர்! உங்களது செல்வச் சிறுவர்களை அழகாக உடுத்திக் கல்விச்சாலைகட்கு அனுப்பிவருகின்றீர்களன்றோ? அவர்கள் அங்கு என்ன கற்றார்கள்? அங்கு பயின்றதால் என்ன ஒழுக்கம் பெற்றார்கள்? என் பவற்றை ஆராய்ந்தறியும் அன்னைமார் உங்களில் எத்தனைப்பேர்? பள்ளிக்கு அனுப்புவதுடன் உங்கள் கடமை கழிந்து விடுவதாகக் கருதுவது எத் துணைப் பேதைமை!

அந்தோ! நமது பள்ளிகளில் இளமையை வசமாக்கி இன்புறச் செய்யும் இன்பம்-அழகு-விளையாட்டு இவைகளில் ஏதேனும் உண்டோ! இவ்விடத்தில், 'பி-ஸ்ரீ' என்பார் ஒரு பத்திரிகையில் வரைந்த சில அரிய உரைகள் நினைவிற்கு வருகின்றன. அவையாவன:—"கையிற் பிரம்பு-முகத்தில் கொடுமை-வயிற்றி லும், தலையிலும் வறுமை-இவை ஆசிரியர் பெருமை. அறிவு வெளியேயிருந்து உள்ளம் புகுந்து நிறைவதன்று என்பதையும், அது உள்ளத்தினுள்ளே அமுத ஊற்றாய்ப் பொங்கி யெழவேண்டுமென்பதையும் ஆசிரியர் உணர்வதேயில்லை. இயற்கையிலேயே, தன்னிச்சைகொண்டு துள்ளித்திரியும் குழந்தைமனம், தன் ஜீவசக்தியை இழந்து, உயிரற்ற-உவகையற்ற ஓர் இயந்திரமாக மாறி விடுகின்றது. கடைசியாக, குழந்தை தெய்வீக இளமை தேய்ந்து, ஒளி மழுங்கி, வலிமைகுன்றி வருகின்றது" என்பனவே.

"பள்ளிக்கூடத்தில் சொல்லிக்கொடுப்பது ஒருவிதமாகவும், வீட்டில் சொல்லிக்கொடுப்பது வேறு ஒரு விதமாகவும் இருந்தால் குழந்தைக்கு ஒரு அபிவிருத்தியுமேற்படாது" என்று காந்தியடிகள், இன்னும் ஓரிடத்தில் எழுதி யிருக்கின்றார்கள். ஆகலான், தமிழ்நாட்டுத் தாய்மாரே! உங்களது செல்வக் குழந்தைகள்-பாரதநாட்டின் பிற்கால வீரர்களாக வரத்தக்கவர்கள் அறிவு வளர்ச்சி யடைந்து, நாட்டு நலம் நாடி உழைக்கத் தக்கவர்களாக வரவேண்டு மானால், அவர்களை அன்பு, இன்சொல், அநுபவம், குழந்தையோடு குழந்தை யாய் ஒன்றுபட்டு எளிதில் விஷயங்களை உணர்த்தும் தன்மை முதலியவற்றை யுடைய நல்லாசிரியரிடத்திலேயே அனுப்புங்கள். அவ்வளவோடமையாது, வீட்டிலும் ஒழுக்கமுறைகளை அவர்களுக்குக் கற்பியுங்கள்.

அன்னியநாட்டுப் பகட்டுடைகளும், அநாவசியமான ஆபரணங்களும் கற்பொழுக்கத்திற் சிறந்த காரிகைகளாய உங்கட்கு அழகுதருவனவாகா, அவை வீண் சுமைகளேயாம். கருணையிற் சிறந்த அன்னைமீர்! அத்தகைய

அநாவசியமான பொருள்களில் வீணே செலவழிக்கும் பெருந்தொகையை மிகுத்திஞல், அஃது எத்துணை ஏழைகட்குப் பயன்படுமென்பதையும், அதஞல், உங்கள் கணவன் மார்கட்கு நீங்கள் அளிக்கும் தொந்தரைகளில் எவ்வளவு அகன்று விடுகின்றன என்பதையும் தயைகூர்ந்து சிறிது யோசித்துப் பாருங்கள்! ஆகலின், அவற்றை வெறுத்து விலக்கி, "குஞ்சியழகும் கொடுந்தானைக் கோட்டழகும்-மஞ்சளழகும் அழகல்ல-நெஞ்சத்து-நல்லம் யாமென்னும் நடுவுநிலைமையாற்-கல்வியழகே அழகு"-எனும் நாலடியை நினைவிலிருத்தி, கல்வியழகே சிறந்ததென்பதை உணர்ந்து, கல்வியிற் சிறந்த காரிகைகளாக முயலுங்கள். காந்தியடிகள் கூறுமாறு, கையினுல் நூற்கப்பட்டுக் கையினுலேயே நெய்யப்பட்ட தெய்விக அழகுவாய்ந்த தூய கதராடையையே உடுத்தத் தொடங்குங்கள். வீட்டிலிருந்தவாறே, ஓய்ந்த வேளைகளில் இராட்டைச் சுழற்றி வருவதஞல் நீங்கள் உடல் நலமும், மனமகிழ்ச்சியும் அடைவீர்கள்; உங்களிடம் வம்பளக்கவரும் பெண்களது பயனற்ற கூட்டுறவினின்றும் தப்பித்துக் கொள்வீர்கள். பண்டைய தமிழ்நாட்டிலிருந்த இராட்டையின் தெய்விக ஒலி, மீண்டும் உங்களாலேயே எங்கணும் எழுப்பப்படவேண்டும். உங்கள் கணவன் மாரையும் கதரையே உடுத்தச் செய்வீர்களாக. உங்களது குழந்தைகட்கும் கதரையே உடுத்தி மகிழ்வீர்களாக. ஒரு கஜம் கதருக்காக நீங்கள் தரும் பணத்தில் ஒவ்வொருபைசாவும், வயிற்றுக்கின்றி வாடிவருந்தும் ஏழைகளுக்கே சென்று சேர்கின்றது. கதர் வாங்குவதால், நீங்கள் தரும் பணத்திற்குத் தக்க பயனைப் பெறுவதோடு, ஏழைமக்களையும் ஆதரித்தவர்களாகின்றீர்கள். மகாத்மா மனம் மகிழ, கதரையே இன்றுமுதல் உபயோகிக்கத் தொடங்குங்கள். உங்களது குழந்தைகள் ஒவ்வொருவரும் அழகிலும், உடல் வளத்திலும், வீரத்திலும், கல்விப் பயிற்சியிலும் கண்ணபிரானைப் போன்றும், முருகனைப் போன்றும் வளர்ந்து வருவார்கள். அயல்நாட்டு நாகரிகமோகத்தை அறவே விட்டொழிமின்; பெண்மக்களின் தேசசேவையையே பாரத அன்னை பெரிதும் விரும்பி நிற்கின்ருள்; சாவித்திரியின்-பாஞ்சாலியின்-ஜானகியின் ஆசீர்வாதங்கள் உங்கட்கு உண்டாவன வாகுக, பாரத அன்னை உங்கட்கு அருள்வாளாக. வந்தேமாதரம்.

ஆ. வ. பதுமநாப பிள்ளை, ஆரியூர்.

---

## மாதரும் குடும்பமும்

(122-ம் பக்கத் தொடர்ச்சி.)

சிலர், நாங்கள் எங்களுக்கு வேண்டிய வேலைகளைச் செய்வதற்காக வேலைக்காரரை யமர்த்திக்கொள்வோமெனக் கூறலாம். அப்படி வேலைக்காரரை யமர்த்திக்கொள்ளுதல் எல்லோர்க்கும் சாத்தியமான காரியமா? ஒரு சிலர்க்கே சாத்தியமாகும்; அதுவும் கூலித்துணையே யன்றிச் சரியானதுணையாகுமா?

ஓர் ஊரில் பெரிய உத்தியோகஸ்தரொருவரிருந்தார். அவர் செய்த ஓர் குற்றத்தினிமித்தம் மேலதிகாரிகள் அவரை ஒருவருஷத்திற்கு வேலைக்கு வரலாகாதென்று நீக்கிவிட்டனர். அவருக்கு வேலையில்லாமையால் சம்பளமுமில்லை. அதஞல் மிகுந்த வருத்தமடைந்த அவ்வுத்தியோகஸ்தர் தம் சமையற்காரனைப்பார்த்து 'அப்பா! என் நிலைமை இப்படியாயிற்று; முன்போல செலவு செய்யமுடியாது; வரும்படி நின்றுபோய் விட்டது; நான் மிகவும் செட்டாகச்

செலவு செய்தாலொழிய காலங்கழிக்கமுடியாது. ஆதலால் நீ பத்திரமாயிருக்க வேண்டும்; தலைகால் தெரியாமல் சாமான்களைக் கைகொண்டமட்டும் வாரிப் போட்டுச் செலவு செய்யாதே' என்று கட்டளையிட்டார்.

ஒருநாள் யாவரும் சாப்பிட்டு முடிந்தது. சமையற்காரன் சாப்பிட உட்கார்ந்தான். அப்பொழுது கைநிறைய நெய்விட்டுக்கொண்டான். அச்சமயம் தற்செயலாய் அங்குவத்த வீட்டெசமானர் அதைக்கண்டு விட்டார். அவர் வயிறெரிந்துவிட்டது. அதனால் அவர் சமையற்காரனைப் பார்த்து 'அடே! பயலே! இப்படியும் செய்யலாமா? நான் எவ்வளவு நெய்விட்டுக் கொள்கிறேன்; சாஸ்திரத்திற்கு ஒரு சிறு கரண்டி நெய்யல்லவா விட்டுக் கொள்கிறேன்; இதுவரையில் எவ்வளவோ கடன் வாங்கிக் காரியத்தை நடத்திவருகிறேனே' என்று கோபத்தோடு சொன்னார். அப்பொழுது அப் பரிசாரகன் அவரைநோக்கி, 'எசமானே! உமக்கு வேலைபோய்விட்டதாகையால் நீங்கள் கொஞ்சமாகச் சாப்பிடவேண்டியது நியாயந்தான். ஆனால் என்வேலை போகவில்லையே; எதற்காக நான் குறைவாகச் சாப்பிடவேண்டும்' என்றுகேட்டான் என்று ஓர் கதை சொல்வதுண்டு

சகோதரிகளே! இது ஓர் கட்டுக்கதையே யாயினும் கூலியாட்களெல்லாம் தங்கள் காரியத்தில் பணம் கிரகிப்பதில் கண்ணுயிருப்பார்களே யல்லாமல் நம்முடைய கஷ்டநஷ்டங்களைக் கவனிப்பவர்களல்லரென்பது மாத்திர முண்மைதானே. இத்தகை யோருடைய துணை எப்படிச் சிறந்த துணையாகும். நமது இன்பதுன்பங்களைத் தம்முடையவைகளாகக் கருதுவோருடைய துணையல்லவா நல்லதுணை. அத்தகையோர் யாவர்? நமது குடும்பத்தைச் சேர்ந்த பந்துக்களே யல்லவா; அவ்வாறின்றி,

வேறு குடித்தனமுள்ள வீட்டில் குடியிருந்தாலென்ன? ஒருவர்க் கொருவர் உதவியாயும் துணையாயு மிருக்குமே எனின், அதுவும் கஷ்டமாகவே முடியும். ஏனெனில், இங்கு விவரிக்கக்கூடாத பலதுன்பங்கள் நேரிடுவதுமுண்டாயினும் சதாரணமாகப் பெண்களுக்குள் ஒற்றுமையுண்டாவது முயற்கொம்பாகலின் சதா சண்டையும் சச்சரவுமாகவே யிருந்துகொண்டிருக்கும். 'பெண்டுகள் கூடிடிற் பெருத்த சண்டையாம்' என்பது உண்மையாகவே யிருக்கிறது. ஆயிரம் குடுமிகள் (ஆண்கள்) ஒன்றாகக் கூடியிருக்கும்; இரண்டு கொண்டைகள் (பெண்கள்) கூடிவாழ்தல் அருமை. தவிர, தமது சொந்தமான-இரத்தக்கலப்புள்ள-இன்பதுன்பங்களில் பாத்தியமுள்ள பந்துக்களோடு மனமொருமித்து வாழமுடியாதபோது அன்னியருடன் ஒற்றுமையுடன் வாழ்வதெப்படிக்கூடும்? கூடாது. ஆகவே, அவர்களுடைய உதவியை எக்காலத்தும் எதிர்பார்க்க முடியாது. இவ்வாறு இன்னும் எத்தனை வழிகளில் ஆராய்ந்து பார்த்தாலும் ஒவ்வொருவரும் தம்தம் சொந்த மனிதர்களுடன் கூடி வாழ்வதே சிறந்த வாழ்க்கை யென்பதே சரியானது என்றேற்படும்.

(தொடரும்.) பூ. ஸ்ரீநிவாசன், சித்தூர்.

## ஓர் வேண்டுகோள்.

இமோத்கிரிமுதல் சேதுபரியந்தம் அவ்வப்போது நடைபெறும் இந்து மத தேவாலய உற்சவாதிகளையும், அதுசம்பந்தமான வேறு விசேஷங்களையும் தெரிந்த சந்தா நண்பர்கள் வருஷ, மாச, தேதி, திதி, நக்ஷத்திரம் உள்படக் குறித்தனுப்பின் அவை நமது பஞ்சாங்கத்தில் வெளியிடப்படும்.




## பட்டு உற்பத்திசெய்யும் விதம்.

(170-ம் பக்கத் தொடர்ச்சி.)

இந்தியாவின் பட்டு உற்பத்தி இரண்டு முக்கிய பிரிவுகளாகப் பிரிக்கப்படும். அவை வீடுகளிலேயே பட்டுப் பூச்சிகளை வளர்த்துப் பட்டெடுத்தல், காடுகளிலுள்ள பூச்சிகளைக் கொண்டுவந்து பட்டு உண்டாக்கல் என்பவையே. இவற்றுள் பின் கூறியதைச் சிறிது ஆராய்வோம். இந்தியர்கள் பட்டுப்பூச்சிகளைக்கொண்டு நான்குவிதமான பட்டுகளை உற்பத்தி செய்கின்றனர். அவை சாதாரண உற்பத்தி, 'முகா' (Muga) உற்பத்தி, டாசர் தொழில் (Tasar), 'இரி' (Eri) தொழில் ஆகியவையேயாம். இவைதாம் வியாபாரமுறையில் பெரிதும் ஏற்கப்படுவன. இந்தியாவிலும் சையாமிலும் பல நூற்றாண்டுகளாக இயற்கையாகவே இப்பூச்சிகள் உள்ளன. இப்பட்டுப் பூச்சிகள் பலவகைப்பட்டவைகளாகி, வெவ்வேறுவிதப் புழுக்கூடுகளை வேய அவற்றினின்று பட்டு உற்பத்தி செய்யப்படுகின்றது. பட்டு உற்பத்தி 'பாம்பிக்ஸிடி' (Bomby cidae), 'யடிக்சிடி' (Attacidae) என்ற இருபெரும் பிரிவினை யுடையது. இவ்விரண்டினுள்ளும் முன்னதே பட்டுநூலாக்க மிகவும் ஒத்ததாம்.

இப்பட்டுப் பூச்சியானது பிரகாசிக்கின்ற வடிவழகுள்ளதாயும், இறைவன் படைப்பில் அபூர்வமானதாயும், அழகுடன் அங்கக்கட்டுள்ளதாயும், பன்னிரண்டு கண்களும், பதினாறு பாதங்களும், பதினெட்டு நாசித்துவாரங்களுமுள்ளதாயும், வன்மையுள்ள ஒரு வாயையும், அதிக சீக்கிரத்தில் சீரணிக்கச் செய்யும் சீரணக்கருவிகளையு முடையதாயு மிருக்கின்றது. இதன் தோற்றத்தையும் வேலையையும் காண்பார் வியப்படையாதிராரென்பது திண்ணம். இறைவனது இயற்கைப் படைப்பில், இது தனது உபயோகத்தில், அழகை மிஞ்சி நிற்கின்றது.

### முகா பட்டு.

முகா பட்டுப்பூச்சிகள் பலவகை மரங்களின் இலைகளில் கூடுகட்டி வசிக்குமாயினும் 'சம்' (Sum), 'மாசிலஸ்' (Machilus), ஓடரோடிசிமா (Odoratissima), 'சுயாலா' (Suala), தெத்தான்திரேயா மனோபிதாலா (Tetranthera Monopetala) *முதலான மரங்களில் மட்டும் அவை நிரந்தரமாகக் கூடுகட்டும். அசாம் மாகாணத்தில் பட்டுப்பூச்சிகள் வீடுகளிலும் வளர்க்கப்படுகின்றன. ஆனால் அவற்றைச் சுயேச்சையாக வீட்டின் சுற்றுப்பக்கங்களிலுள்ள மரஞ்செடிகொடிகளில் வசிக்கவிடல் வேண்டும். சுயேச்சையாகக் கூடு பின்ன விடப்படும் பூச்சிகளாற் பெறும்பட்டே மிகவும் நேர்த்தியானதாகும்.

'சுவாலா' என்ற மரங்கள் பயிர் செய்யப்படும் தாவரவர்க்கத்தைச் சேர்ந்தவையல்ல. அவை கிராமப் பக்கங்களின் புறம்போக்கு † நிலங்களில் அடர்ந்து வளரும். 'சம்' என்பது தோட்டங்களிலும், வீட்டின் பக்கங்களி

---

* அசாம் மாகாணத்திலுள்ள மரங்களுக்கு இவையே பெயர் போலும்.

† பொதுப்பாதையாகவும், உபயோகமற்றவையாகவும் ஒதுக்கப்படும்நிலபாகம்.

லுமே பயிர் செய்யப்படும். இம்மரங்கள் ஒன்று அல்லது இரண்டு வருடங்கள் வரையில் அவற்றின் இலைகளில் பட்டுப்பூச்சிகளை இருக்கவிடுவது தகுதியன்று. மூன்று வருட வளர்ச்சிக்குப் பின்னர் இம்மரங்களில் கூடுகட்ட விடுவதே சிலாக்கியம். 'மூகா' என்னும் பட்டுப்பூச்சி ஆண்டில் ஐந்துமுறை அடைகாத்துப் பெருகும் தன்மையது. அவ்வக்காலங்களில் அவற்றினின்றும் பட்டு உற்பத்தியும் செய்யப்படும். அப்பருவங்கள் பின்வருமாறு பிரிக்கப்படும் :—

| | | | |
|---|---|---|---|
| 1. | காடியா | (Katia) | இலையுதிர்காலம் |
| 2. | ஜர்ணு | (Jarna) | மாரிக்காலம் |
| 3. | ஜெத்ணு | (Jethna) | வெயில்காலம் |
| 4. | அஹிர்ணு | (Aherna) | முன் மழைக்காலம் |
| 5. | பாடியா | (Bhadia) | பின் மழைக்காலம் |

பட்டுப்பூச்சி மேலே குறிப்பிட்ட ஒவ்வொரு பருவத்திலும் வருட முழுவதும் தோன்றிக் கடைசி, அதாவது ஐந்தாவதாகக் குறிப்பிட்ட காலத்தில் கொட்டைக் கூட்டை வெளிப்படுத்துகிறது. இக்கூடுகள் பொன் மஞ்சள் நிறமுடையனவாயும் $1\frac{3}{4}$ அங்குல நீளமும் 1 அங்குல குறுக்களவு முள்ளனவாயு மிருக்கின்றன. பட்டு அடைகளின் நேர்த்தி பருவத்தைப் பொறுத்ததாயிருக்கும். அவற்றுள் முதலே யாவற்றுள்ளும் தலைசிறந்து விளங்கும்.

**வளர்ச்சி:**—பட்டெடுப்பதற்குத் தேர்ந்தெடுக்கப்பெற்ற கூடுகள் வீட்டெல்லையில் பாதுகாப்புடன் மூங்கில் கூட்டோடு தொங்கவிடப்படுகின்றன. பூச்சிகள் மாலையில்கூடிச் சிறிது நேரத்திற்குள் சேருகின்றன. பெண் பூச்சிகளை அவற்றின் பருத்த உருவத்தினின்றும் கண்டு தெளியலாம். ஆண்பூச்சி இருபத்து நான்கு மணிநேரம் வரையில் பெண்பூச்சியுடன் கூடியிருந்து பின்பு பெண்பூச்சியைப் பிரிந்து செல்லும். பிறகு பெண்பூச்சிகள் முட்டையிடுகின்றன. மூன்று நாட்களுக்குப் பிறகு இடும் முட்டைகளை ஒதுக்கிவிட, ஒவ்வொரு பூச்சியிடத்திலிருந்தும் சுமார் 250 முட்டைகள் தேருகின்றன. இம்முட்டைகள் இருள் மிகுந்த இடத்தில் பாதுகாக்கப்பட, எட்டு அல்லது பத்து நாட்களுக்குள் இவை பொறிக்கப்படும். முட்டையினின்றும் வெளிப்படும் புழுக்கள் காலங்குல நீளமுள்ளவை; கருப்பும், மஞ்சளுமாகிய வண்ணங்கள் மாறிமாறி யமைந்த மேல் வண்ணமுடையன; இவை மோதிரம் போன்ற தொடர்களாலாக்கப் பெற்றிருக்கும். இவை நான்கு சட்டையுரிகளினிடையே கடந்து ஒவ்வொன்றிலும் ஏறக்குறைய 36 மணிநேரம் தங்குகின்றன. நன்கு வளர்ந்து முதிர்ந்த பூச்சி 5 அங்குல நீளமும் ஒருவிரல் பருமனுமுள்ளதாக இருக்கும்; இது 'பக்கா'ப் பூச்சியென்றழைக்கப்படும். நான்காவது சட்டையுரி இடத்தைக் கடந்த பூச்சி ஓர் புது உருவம் பெற்று வெகு விரைவில் வளர்கின்றது. இப்பொழுது அப்புழு 'மூகா' என்னும் முதிர்ந்த நிலையை யெய்திக் கூடுவேயும் தன்மையை யடைகின்றது.

**விருத்தி:**—பிறகு அந்தப் புழுக்கள் 'ஜாலி' என்ற ஒருவகைப் பாத்திரத்திலிடப்படுகின்றன. அப்பாத்திரத்தில் பசுமையான மரக்கொம்புகள் இலைகளுடனிடப் பெற்றிருக்கும். இந்தப் பாத்திரத்தில் பட்டுப் புழுக்கள் சுழன்று ஊர்ந்துகொண்டேயிருக்கும். நான்கு நாட்கள் முதல் ஏழுநாட்கள் அப்பட்டு ஆடைகளை நூற்பதற்கு வேண்டியிருக்கின்றன. அப்புழுக்கள் இறந்து மூழ்கியபின்னரே பட்டு அடைகள் அப்பாத்திரத்திலுள்ள தண்ணீரிலிருந்து வெளியே எடுக்கப்படும்.

(தொடரும்) S. V. வரதராஜய்யங்கார், உறையூர்.



## ஸ்டீவன்ஸனும் நீராவி யந்திரமும்.

இங்கிலாந்தில் ஆழமான சுரங்கங்களிலிருந்து நிலக்கரி எடுத்து வந்தார்கள். இதைப் பார்த்த ஜேம்ஸ்வாட் என்பவர் கரிகளைச் சுலபமாக வெளியேற்ற ஒரு நீராவியந்திரத்தைப் புதிதாய்க் கண்டுபிடித்தார். வேலையில்லாதபோது இந்த யந்திரம் நிலையாக ஓரிடத்தில் வைக்கப்பட்டு வந்தது. பூமியின்மேல் பாரமான சுமைகளை ஏற்றிக்கொண்டு தானே செல்லத் தக்க யந்திரமொன்றை அதுவரையில் கண்டுபிடிக்கக்கூடுமென்று ஒருவரும் நினைத்ததேயில்லை. ஆனால் வாட் என்பவரின் இத்தகைய பெரிதான நூதன சிருஷ்டியின் பிறகு, கரிகளை விற்பனைக் கடைகளுக்குக் கொண்டுபோக இவ்வித யந்திரம் வேண்டியதவசியமென்று மனிதர் விரும்பினார்கள். அவ்வாறே ஜனங்கள் ஷை யந்திரங்களைத் தயாரித்துச் சிறிதுசிறிது தூரத்திற் கொன்றாக அவற்றை ரஸ்தாக்களில் நிறுத்தினார்கள். ஒவ்வொருவரும் கரியேற்றப்பட்ட வண்டிகளைக் கயிறுகட்டி யிழுத்துக்கொண்டுவந்து ஷை யந்திரங்களுடன் பிணைத்துத் தங்கள் காரியங்களை எளிதாக நிறைவேற்றிக்கொண்டு வந்தார்கள்.

ஒரு தகர சுரங்கத்தில் வேலையாயிருந்த ரிச்சர்ட் டிரிவெதிக் என்பவர் 1802-ல் ஒரு நீராவி வண்டியைக் கண்டுபிடித்தார். இந்த வண்டி நான்கு சக்கரங்களைக்கொண்ட ஒரு சாதாரண தபால் வண்டியைப்போலிருந்தது. இதற்கு ஸ்தம்பாகாரமான குழாயொன்றுண்டு. இக்குழாய் ஒரு அடுப்புடனும், நீர் கொதித்தற்குரிய ஒரு பாத்திரத்துடனும் வண்டியின் பின்புற இருசில் சேர்க்கப்பட்டிருந்தது. இயந்திரத்தின் வேலைப்பாடுகள் ஜனங்கள் மதிக்கக் கூடிய அவ்வளவு திருத்தமானதாக இல்லாவிட்டாலும், யந்திரம் பயன்படக் கூடியதாயிருந்தது.

இவ்வண்டி தயாரிக்கப்பட்ட இடத்தின் சமீபத்திலிருந்த ஜனங்களுக்கு இது ஒருவித மனக் குழப்பத்தை யுண்டு பண்ணிற்று. இது ரஸ்தாவில் தானே போவது ஜனங்களுக்கு ஒருபுறம் ஆச்சரியத்தையும் ஒருபுறம் திகிலையும் கொடுத்தபடியால், அவர்கள் இதை யொரு பயங்கரமான வஸ்து என்று சொல்லத் தலைப்பட்டார்கள்.

இதைக் கண்டுபிடித்தவர், கப்பல் மூலமாக இதனை லண்டனிலுள்ள காட்சிச் சாலைக்குக் கொண்டுபோனார். இக்காட்சி அங்கு பலர்க்கு வியப்பைத் தந்தது. அக்காலத்தில் சரியான ரஸ்தாக்கள் அபூர்வமாயிருந்த படியால் இந்த யந்திரம் சரிவர நடையாடுவதற்கு ஏது வில்லாமற் போயிற்று. ஆகவே இத்தகைய யந்திரவண்டிகளை நடத்துவது வீணென்று ரிச்சர்ட் கைவிட்டார். பிறகு எவரும் இதுபோன்ற வண்டியைச் செய்வதில் ஊக்கமுடையவராயில்லை.

இடையில், நியூகாஸிலி னருகே ஒரு கரிசுரங்கத்தில் வேலை பார்த்து வந்த ஜார்ஜ் ஸ்டீவன்ஸன் என்னும் வாலிபனொருவன் ஒரு புதுவிதமான நீராவி யந்திரத்தைப் பரீக்ஷார்த்தமாய்ச் செய்யலுற்றான். இவன் 1781-ல் பிறந்தவன்; ஊரிலுள்ள மற்ற பிள்ளைகளைப்போலவே இவனும் சாதாரணமாகக் காலங்கழித்து வந்தவன்; இவன் அயல் வீட்டாரொருவரின் பசுக்களை மெய்த்து வந்தான்; கரிசுரங்கத்தில், கரிகளுடன் கலந்திருந்த கற்களை வெளியே எடுத்துப்போடும் வேலையையுஞ் செய்துவந்தான். இவன் இந்த

வேலையிலிருந்து படிப்படியாய், நெருப்பெரிப்பவனுக்கு உதவியாயிருந்து முடிவில் யந்திரவிதி தெரிந்தவ (Engineer) னானான்.

இந்த ஸ்டீவன்ஸன், பிறகு, லண்டன் நகருக்குக் கப்பல் மூலமாக நிலக்கரிகளை யேற்றியனுப்பும் இடமாகிய டைன் நதியின் கரையிலிருந்த புதியதோர் சிறு வீட்டில் வசித்துவரலானான். இங்கே இவன் ஒரு பெண்ணை விவாகஞ் செய்துகொண்டு குடும்பஸ்தனானான். மலைமீது கரிகளைக் கொண்டு போகும் வண்டிகளை இழுத்துச்செல்லும் யந்திரத்தை நடத்துவதே இவனுடைய தொழிலாயிருந்தது. கரிவண்டிகளை இழுத்துப்போகக்கூடிய நீராவி யந்திரமொன்றை உற்பத்திசெய்யும் வழிகளை யறிவதிலேயே இவன் தன் காலத்தைப் பெரிதும் கழித்துவந்தான். டிரிவெதிக் என்பவர் கண்டுபிடித்த நீராவி யந்திரத்தை இவன் பார்த்து அதைவிட மேலான தொன்றைத் தான் செய்யக்கூடுமென்று பலர்க்குந் தெரிவித்தான்.

ஸ்டீவன்ஸன் தான் பார்த்த பல யந்திரங்களையுங் கவனித்து, 'டிராவலிங் இன்ஜின்' (Travelling Engine) என்று சொல்லக்கூடிய புதியதோர் யந்திரத்தைத் தான் செய்யக்கூடுமென்று சுரங்கத்தின் சொந்தக்காரரொருவரிடஞ் சொன்னான். அவ்வாறே செய்யும்படி அதற்குவேண்டிய தொகை (பணம்) இவனிடம் கொடுக்கப்பட்டது. இவன் பத்து மாதத்தில் 'பிலட்சர்' (Blutcher) என்னும் ஓர் யந்திரத்தைத் தயாரித்தான். இந்த யந்திரம் ஆட்சியிலிருந்த மற்ற எல்லா யந்திரங்களைவிடச் சிறந்ததாயும், காரிய சித்தியில் பெரிதும் வெற்றிதரக்கூடியதாயு மிருந்தது. அன்றியும் இது, ஒரு மணிக்கு நான்கு மைல் வீதம், 30-டன் நிறைகொண்ட பளுவேற்றப்பட்ட வண்டிகளில் 8 வண்டிகளை ஒரே தடவையில் தண்டவாளக் கம்பிகளின் மேல் இழுத்துக்கொண்டு போகும்.

இவ்வியந்திரம் கொஞ்சகாலந்தான் உபயோகத்திலிருந்தது; பிறகு கைப்பழக்கமில்லாததாய் விட்டது; சரியான வில் முதலிய கருவிகள் இல்லாமையால் இது மிகுதியும் அசைவுகொண்டு தான் சென்றுகொண்டிருந்த தண்டவாளங்களைப் பழுதாக்கிவிட்டதோடு தானுங் கலகலத்து விட்டது. ஆகையால் ஸ்டீவன்ஸன் இதிலும் சிறந்ததொன்றைச் செய்யநேர்ந்தது.

ஸ்டீவன்ஸனுடைய முதல் யந்திரம் புகையைப் பயங்கரமான உரத்த சப்தத்தோடு வெளியில் விட்டதால் அச்சப்தம் குதிரைகளையும் ஆடு மாடுகளையும் மிரளும்படிச் செய்ததுமல்லாமல், பொதுவாக எல்லோருக்கும் தொந்தரவைக் கொடுத்துவந்தது. ஸ்டீவன்ஸன் பிறகு இதன் புகையைப் புகைக்கூண்டு வழியாய் ஆகாயத்தில் போகும்படிச் செய்தான்; அதனால் நல்ல காற்று புகைக்கூண்டுக்குள் நுழைந்து நெருப்பை நன்றாயெரியச் செய்தது. நெருப்பு நன்றாயெரிவதால் புகையும் விரைந்து வெளிப்படலாயிற்று. இச் சூழ்ச்சி நீராவி யந்திரத்தின் விர்த்திக்கு அனுகூலமாய் முடிந்தது.

இப்புதிய நோக்கத்துடன் ஸ்டீவன்ஸன் 1815-ல் இரண்டாவது நீராவி யந்திரத்தைத் தயாரித்தான். இதில் வேறு பல அனுகூலங்கள் சேர்க்கப்பட்டன. இதனால் சக்கரங்களுக்கு விசை அதிகமாயிற்று. மற்றும் இவ்வனுகூலங்கள் எல்லா நீராவியந்திரங்களிலும் கையாளப்பட்டுவந்தன. யந்திரத்தைப் போலவே, ரஸ்தாக்களும், தண்டவாளங்களும் முக்கியமானவையா யிருந்தபடியால், ரஸ்தாக்களில் நீராவியந்திரம் சரியாய்ச் செல்லுவதற்கு, தண்டவாளங்களை ஒன்றோடொன்று பிணைப்பதில் இவன் சிரத்தை மிகுதியும் எடுத்துக்கொண்டான். இதனால் வண்டி சுலபமாகவும் வேகமாகவும் செல்ல ஆரம்

பித்தது. யந்திரம் கலகலத்து ஆடாமலிருப்பதற்காக ஸ்டீவன்ஸன் விற்களை அதற்கு அமைத்தான். இது, சுரங்கங்களிலிருந்து கரிவண்டிகளை மிகவுஞ் சுலபமாயிழுத்துச் செல்லலாயிற்று. இந்த யந்திரத்திற்கு பப்பிங் பில்லி (Puffing Billy) என்னும் பெயர் வைக்கப்பட்டது.

ஸ்டீவன்ஸனுடைய தோழர்கள், சாதாரண ரஸ்தாவில் செல்லக்கூடிய யந்திரத்தைச் செய்யுமாறு அவனைக் கேட்டுக் கொண்டார்கள். இதற்குள் ஸ்டீவன்ஸனுடைய பிள்ளை ராபர்ட் என்பவன் தகப்பனுக்கு உதவி செய்யக்கூடிய வயதை யடைந்து விட்டான். கொஞ்சகாலம் இந்த ராபர்ட் சுரங்கங்களில் வேலை செய்துவந்தான். ஆனால் அவன் தந்தை, பிறகு அவனைக் கலாசாலைக்கு அனுப்பினான். சில வருஷங்களில் ராபர்ட்டும் இன்ஜினியர் பதவியை யடைந்தான்.

சுரங்கக்காரர்கள், கரிகளை வெளியேற்ற, குதிரைகளின் உதவியை நாடி வந்ததினின்றும், இப்போது, நீராவியந்திரங்களையே உபயோகிக்கலானார்கள். 1822-ல் ஒரு சுரங்கக் கம்பெனியார் எட்டு மைல் நீளமுள்ள ஒரு தண்டவாளத்தை யமைத்து அதில் ஓடுவதற்காக ஸ்டீவன்ஸன் நீராவியந்திரங்களில் ஐந்து யந்திரங்களை விலைக்கு வாங்கினார்கள். சில பாகங்களில் குன்றுகளின் வழியாய் யந்திரம் செல்வது கஷ்டமாயிருந்தபடியால், அவ்விடங்களில் நிலையான யந்திரங்கள் அமர்த்தப்பட்டன. சமரஸ்தாவில் 60 டன் நிறையுள்ள 17 நிலக்கரிவண்டிகளை யிழுத்துக்கொண்டு, ஷை யந்திரம் ஒருமணிக்கு 4மைல் வீதம் சென்றது. இவ்விதம், கரிகளைக் கொண்டுபோவதற்கு யந்திரங்கள் மலியவே இங்கிலாந்தின் மற்ற பாகங்களில் ரஸ்தாக்களை முன்னிருந்ததிலும் அதிக நீளமாக்கி ஷை யந்திரங்களின் மூலமாக ஜனங்களையும் சாமான்களையும் ஏற்றிச்செல்ல முயற்சிசெய்தார்கள். இப்படி யந்திரங்கள் பெருகிவிடவே, கால் நடைகளுக்கு இவை பிரதி கூலமாயின. எங்கும் ஜனங்கள் ஸ்டீவன்ஸனை எதிர்க்கலானார்கள். விளையாட்டாக, பார்லிமெண்ட் மெம்பரொருவர், நீராவியந்திரம் மணிக்கு ஒன்பது பத்து மைல் வீதம் ஓடிக்கொண்டிருப்பதால், யந்திரத்தினிடையில் ஒரு பசு அகப்பட்டுக் கொண்டால் அதன் கதி யாதாகும் என்று வினவலானார். ஸ்டீவன்ஸனும் அதற்கு விடையாகக் கண்சிமிட்டிக்கொண்டு, ஆம், அப்பசுவின் கதி யதோகதிதான் என்றான். இத்தகைய அசந்தர்ப்பக் கேள்விகள் பல உண்டாகியும் அவற்றிற்கெல்லாம் ஸ்டீவன்ஸன் ஒவ்வோர்வித சமாதானஞ் சொல்லி, இருப்புப் பாதைகளை எங்கும் போட ஆரம்பித்து வண்டிகளை விடத்தொடங்கினான். ஜனங்கள் இந்த வேடிக்கையைப் பார்க்கத் திரள்திரளாகக் கூடினார்கள்.

ஸ்டீவன்ஸனே முதல் முதலில் 34 வண்டிகளில் நிலக்கரிகளையும், சாமான்களையும் 450 ஜனங்களையும் ஏற்றிக்கொண்டு யந்திரத்தை நடத்தினான். முதலில் ஒரு மணி 5 நிமிஷத்தில் இவ்வண்டித் தொடர் 9 மைல் சென்றது. இவ்வண்டித் தொடர் புறப்பட்ட இடத்திலிருந்து நிற்குமிடம் வரையில் இதில் கடைசியாக இருந்த ஜனங்கள் 600. வண்டியின் வேகம் மணிக்கு 4 மைலிலிருந்து 12 மைல்வரையில் விர்த்தியடைந்து வந்தது. கௌரவத்தை விரும்பிய தனவந்தர்கள் இந்த வண்டித்தொடரில் தங்கள் சாமான்களை மாத்திரம் ஏற்றி யனுப்பி விட்டுத் தாங்கள் தங்கள் சொந்தக் குதிரை வண்டிகளில் ஏறிச் செல்லுவாராயினர். நீராவியந்திர வண்டியில் இத்தனவந்தர் மற்ற ஜனங்களுடன் ஏறிச்செல்வது அகௌரவமென்று நினைத்தார்கள்.

1842-ல் விக்டோரியா மகாராணியார் இந்த இருப்புப் பாதையில் லண்டன் நகரிலிருந்து விண்ட்ஸர் என்னுமிடத்திற்குச் சென்றார். அப்பொழுது தான் கௌரவம் பாராட்டின தனவந்தர்களும் இந்த இருப்புப் பாதை மார்க்கமாகச் செல்ல முன் வந்தார்கள்.

ஸ்டீவன்ஸன் தன் நீராவியந்திரங்களை விருத்தி செய்வதிலும் இருப்புப் பாதைகளை அமைப்பதிலுமே காலங்கழித்து வந்தான். அவனுடைய புத்தி மதியை இதர ஆராய்ச்சிக்காரர்களும் வர்த்தகர்களும் தழுவலானார்கள். அவனுக்குச் சொந்தமான கரிச்சுரங்கங்களுமிருந்தன. அக்காலத்தில் அவன் பெரிய ஐசுவரியக்காரனாக விளங்கலானான். ஸ்டீவன்ஸனுடைய தொழிலைப் பாலிகைகளும் பாலர்களும் தெரிந்துகொள்ள வேண்டியது நன்மையாம்.

ம. இராஜகோபால பிள்ளை.




(172-ம் பக்கத் தொடர்ச்சி)

## பிராணாயாமம்.

பிராணாயாமம் என்பது—பிராணவாயுவை ஒழுங்குபட இழுத்தல், இழுத்த வாயுவைச் சற்று இரு சுவாசக் குழாய்களிலும் பூரித்து நிற்கும் வண்ணம் தடுத்தல், பிறகு சுவாசக்குழாய்களிலிருந்து வெளிப்படும் வாயுவைக் கிரமமாய் விடுத்தல் ஆகிய தொழிலாம்.

உலகில் மனிதர் சுகமாக வெகுகாலம் வரை நோயற்று வாழவேண்டுமானால் முக்கியமாய் பிராணாயாமம் செய்யவேண்டும்; இதைச் செய்தாலொழியச் சுகதேகிகளாகவும், பலசாலிகளாகவும், புத்திக்கூர்மையுள்ளவர்களாயும் இருக்கமுடியாது. எப்பொழுது தேகசுகமில்லையோ, பலமில்லையோ, புத்திக் கூர்மையில்லையோ அப்பொழுது மனிதர் உலகில் நீடித்து உயிர்வாழல் முடியாது. எப்படியெனில் தேகசுகமில்லாதகாலத்து மனிதன் சரீர உபாதிகளால் பாதிக்கப்பட்டு, எங்கும் நிறைந்து விளங்கும் கடவுளை அடையும் மார்க்கங்கள் எத்தனையோ கோடிக்கணக்காக இருந்தும் அவற்றுள் ஒன்றை யாவதுபற்றி யனுசரிக்க முடியாமல், பயந்தமனத்தனாய், உயிர் வாழ்வதற்கு முக்கிய ஏதுவாயுள்ள பிராணனை நடத்தும்வழி தெரியாதகாரணத்தால் சரீரத்தினின்று போதல் வருதலாகிய காரியங்களை நிகழ்த்திக்கொண்டிருக்கும் பிராணவாயுவை இழந்து அற்பகாலத்தில் பிணமாக மாறுகின்றான்.

மூச்சைத் தம் வயப்படுத்தி நடத்தும் திறமைவாய்ந்தோர், தாங்கள் கோரிய விஷயங்களைப் பூர்த்திசெய்துகொள்ளச் சாத்தியமுடையவராவார்கள். உலகில் புத்திசாலிகள் என்று சொல்லிக்கொள்ளும் அநேகம் மேல்நாட்டுக் கீழ்நாட்டு வைத்திய நிபுணர்களுங்கூட சுவாசத்தால் நாம் உயிர் வாழ்கின்றோம் என்பதை யுணராமலும், சுவாசத்தை நடத்தும் சாதனத்தைச் செய்யவேண்டும் என்பதை மறந்தும், உடலைக் காப்பாற்றுதற்கு அநேகவித

மான இரத்தசுத்தி மருந்துகளையும், பலந்தரும் மருந்துகளையும் கண்டு பிடித்துவிட்டோம் என்று விளம்பரப்படுத்தியும், அவற்றிற்குப் பலரிடம் நற் சாட்சிகள் பெற்றும் மேற்படி மருந்துகளை விற்றும் பணம் சம்பாதிக்கின்றார் கள். இது மிகவும் பொருத்தமில்லாத விஷயமாகும். பிராணாயாமத்தா லேயே இரத்தசுத்தி, பலம் முதலியன உண்டாகின்றனவென்பதை அவர்கள் உணரவில்லை. ஆதலின் மேல்நாட்டு வைத்தியசாஸ்திரத்தில் கூறியபடி நம் சரீரத்தில் இன்னவிதமாக இரத்தம் சுத்தப்படுகின்றது என்பதையும், நமக்கு பலம் இன்னவிதமாக உண்டாகின்றது என்பதையும் சிறிது கூறி, அவற்றின் படி நடந்தவர்கள் பலமடைந்திருப்பதை, அவற்றிற் குதாரணமாகக் காட்டிப் பிராணாயாமம் செய்யும விதத்தையும் தெளிவாக ஒவ்வொருவரும் அப்பியா சிக்கும்படி எழுதுவாம்.

மேல்நாட்டு வைத்தியசாஸ்திரங்களில் ஒன்றாகிய அனாடமி என்னும் சரீரதத்துவ சாஸ்திரமானது, "நமது இருதயத்திலிருந்து வெளிப்படும் சுத்த இரத்தமானது சரீரம் முழுவதும் சுத்த இரத்தக்குழாய்களின் ஆர்டரிஸ் வழியாகச் சென்று மீண்டும் திரும்பி அசுத்தத்தையடைந்து, அசுத்த இரத் தக் குழாய்களின் வெயின்ஸ் வழியாய் மீண்டும் திரும்பிச் சுவாசக் குழாய் களின் முடிவையடைந்து, அவ்விடத்திலுள்ள சிறிய கணக்கற்ற இரத்தக் குழாய்களில் பாய்ந்து, அதேயிடத்தில் வந்துசேரும் (நாம் நாசியின்மூலமாய் உட்கொள்ளும்) காற்றின் பரிசத்தால் அசுத்தமானது நீங்கிச் சுத்த இரத்த மாக மாறுகின்றது. அசுத்த இரத்தத்திலிருக்கும் விஷங்கள் நாம் வெளிப் படுத்தும் காற்றுடன் (கரியமலவாயுவாய்) கலந்து வெளிவந்து விடுகின்றது. சுத்தமடைந்த இரத்தமானது மறுபடியும் இருதயத்திற் சென்று மீண்டும் சுத்த இரத்தக்குழாய்களின் மூலமாய் வெளிப்பட்டுச் சரீரத்தில் வியாபிக்கின் றது" என்று கூறுகின்றது. ஆதலின் இதைக்கண்ணுறும் உங்களுக்கு நம் தேகத்திலுள்ள இரத்தமானது எப்படிச் சுத்தமாகின்றது என்பது நன்றாய் விளங்கும்.

இதனால் நாம் தெரிந்துகொண்டது என்னவென்றால், நாம் உட்கொள் ளும் சுவாசத்தாலன்றி வேறு எவ்வகையிலும் நமது சரீரத்திலுள்ள இரத்த மானது சுத்தமடையாது என்பதே. ஆகையால் நாம் சுத்த இரத்தத்தோடு வாழவேண்டுமானால் அதற்கு முக்கியமானது சுவாசமேயாகையால் அத் தகைய சுவாசத்தைக் கிரமமாக நடத்தும் சாதனத்தை கைக்கொள்வது அவசியமாகும்.

சரீரத்தில் சுவாசத்தால் பலமுண்டாகுமேயன்றி மாமிசம், இரத்தம், எலும்பு, நரம்பு முதலானவைகளால் பலம் ஏற்படுவதில்லை. எப்படியெனில்!—

நம்முடைய சரீரம் ஏறக்குறைய 150 ராத்தலுக்கு மேற்பட்ட நிறையுள்ள தாயிருக்கின்றது. அவ்வளவு பளுவான சரீரத்தை எழுப்பவும், உட்காரவும், அசைக்கவும் நடக்கவும் ஓடவும் செய்வது காற்றேயன்றி வேறன்று. நமது சரீரத்தில் காற்றின் பலத்தினாலேயே சகல காரியங்களும் நிகழுகின்றன என் னும் ஞானம் நமக்கு ஏற்படாத காரணத்தால் நாம் காற்றின் அரும்பெரும் பயனைத் தெரிந்துகொள்ளாமல் காற்றை ஒழுங்குபெற நடத்தும் துறையில் முயற்சியற்றவர்களாகின்றோம். மூச்சை சரீரத்தில் சற்று நிதானிக்கும்படி தடுக்காவிடில் எந்தக்காரியமும் நிகழாது. ஆனால், நாம் அதைக் கவனிப்பது கிடையாது. ஒரு மூட்டை அல்லது வேறு யாதாயினுமொரு பளுவான வஸ்துவைத் தூக்கும் காலத்தில் மூச்சை அடக்காவிடில் அந்த மூட்டை அல்லது பளுவுள்ள வஸ்து மேலே கிளம்பாது. இவ்வாறு பளுவுள்ள வஸ்து

வைத் தூக்கும்போது மூச்சைப் பிடித்துக்கொண்டே தூக்கவேண்டியிருப்பது எல்லோருக்கும் தெரிந்ததே. இதைக்கொண்டே மூச்சை சரிவர நடத்தத் தெரிந்துகொண்டு அதன்படி நடப்பது அவசியம் என்பதை உணர்ந்து கொள்ளலாம்.

சாதாரணமாய்த் துப்பாக்கி ஒன்றில் அல்லது, நீண்ட குழாயில் ஓர் முனையில் குண்டைவைத்து, மறுமுனையில் துளைக்குத் தகுந்த அளவுள்ள கட்டையை அல்லது இரும்பை வைத்து வேகமாக உள்ளே செலுத்தி அழுத்தினால் அந்த நீண்ட குழாயின் மத்தியில் தங்கி உள்ள காற்றானது நெருக்கத்தை அடைந்து முழுப்பலத்தோடு வெளிக்கிளம்ப முயற்சிக்கும். அப்போது குழாயின் மறுமுனையிலுள்ள, இரும்பினாலோ அல்லது வேறு எவ்வித உலோகத்தாலோ ஆன குண்டை இரண்டுமூன்று பர்லாங்கு தூரம் தள்ளி விடுகின்றது. அதுபோலவே நம்முடைய நீண்ட சுவாஸக் குழாயில் செல்லும் காற்றை நாம் சற்று தடைப்படுத்துவோமாகில், அது நம் சரீரத்தில் உள்ள இரத்தத்தை இரத்தக் குழாய்களின் மூலமாகச் சரீரம் முழுவதிலும் பரவச் செய்வதுமன்றி இரத்தத்திலுள்ள அசுத்தங்களைக் கிரகித்துக் கொண்டு வெளிப்பட்டுவிடும். அன்றியும்,

உலகின் கண் சர்வசாதாரணமாய் ஒவ்வொரு தேசத்தவர்களும் தேகப் பயிற்சியின்சாதனமானது சரீரபலத்திற்கு ஏதுவானதென்று சொல்லுகின்றார்கள். அத்தேகப்பயிற்சியானது மேல் நாட்டார்களால் (ஜிம்நாஸ்டிக்) என்று சொல்லப்பட்டு ஈகன்சான்டோ அவர்களால் கூறப்பட்டிருக்கும் விதிப்படியும், இன்னும் பல முறைகளினபடியும் சாதனம் செய்யப்பட்டு வருகிறது. நம் தேசத்தவர்களும் செந்தோலா, கர்லா, ஜோடி முதலிய பல கருவிகளின் சாதனங்களாலும், தண்டால் முதலிய சாதனங்களைக்கொண்டும் தேகப் பயிற்சி செய்து சரீரபலத்தைப் பெறுகின்றார்கள் என்பது சகலரும் உணர்ந்த உண்மையே. மேற் சொல்லிய சாதனங்களைச் செய்கின்றவர்கள் தாங்கள் செய்யும் அத்தேகப் பயிற்சியின் சாதனத்தினாலேயே சரீரத்திற்குப் பலம் உண்டாகிறது என்று எண்ணுகிறார்கள். இதைப் பற்றி நன்றாக ஆராயுமிடத்து, சரீரத்திற்கு ஏற்படும் பலமானது, சுவாசத்தை அடக்கிப் பழகும் பழக்கம் அதிகரிக்கின்றபடியினாலேயே உண்டாகிறதென்பது ஐயமற விளங்கும். தண்டால் முதலிய சாதனங்களைச் செய்கின்றவன் ஆரம்பத்தில் 5, 10 தண்டால்வரை செய்ய ஆரம்பித்துப் பின்னர் 100, 200 வரை செய்யப் பழகும் காலத்தில் என்ன பழக்கம் ஏற்படுகின்ற தென்னின், சுவாசத்தை அடக்கும் பழக்கமே அதிகரிக்கின்றது. சுவாசத்தை அடக்கிப் பழகும் பழக்கம் செய்கின்றோம் என்ற ஞானம் இல்லாமலே வேறு சாதனத்தால் தம்முடைய சரீர அவயவங்களுக்குப் பலம் ஏற்படுகின்றது என்று, மேல் சொல்லிய அப்பியாசங்களைச் செய்கின்றவர்கள் நினைத்துக் கொண்டிருந்த போதிலும், வாஸ்தவத்தில் சுவாசத்தை அடக்கிப் பழகும் பழக்கத்தினாலேயே சரீரத்திற்குப் பலம் ஏற்படுகின்றது என்பதை ஒவ்வொருவரும் உறுதியாகக் கூறலாம்.

நாம் சர்க்கஸ் முதலியன நடக்கும் இடங்களில் சாண்டோ முதலியவர்களால் செய்து காட்டப்படும் வேடிக்கைகளில் மோட்டார், கைவண்டிகள், மிகுந்த பாரமுள்ள கருங்கற்கள் முதலியவற்றை மார்பின்பேரில் ஏற்றுவதும், மிகுந்த பளுவைச் சுமப்பதும் எதனுடைய பலத்தால் ஏற்படுகின்றன என்று யூகிப்போமானால் சுவாசபந்தத்தின் பலத்தாலேயே உண்டாகின்றன என்பதை உணர்வோம். சுவாஸபந்தனம் செய்யாமல் ஒரு பெரிய பளுவுள்ள பொருளை மார்பின்பேரில் வைக்கும் பக்ஷத்தில், நமது மார்புக் கூண்டிலுள்ள எலும்புகள் பொடியாய் நொறுங்கிவிடும். சுவாசபந்தனஞ் செய்தால் மார்பு

அவற்றைத் தாங்கிக்கொள்ளும்; ஒரு மோட்டார் வண்டியின் சக்கரத்திலுள்ள ரப்பர் குழாய்க்குள் செலுத்தி அடைக்கப்பட்டிருக்கும் காற்றானது மோட்டார் வண்டியையும் அதன்மீதுள்ள ஜனங்களையும் தாங்கிக்கொண்டிருப்பதைப்போல், நமது சுவாசக் குழாய்க்குள் செலுத்தி அடைக்கப்படிருக்கும் சுவாசபந்தமானது மார்பின்மீது வைக்கப்படும் பளுவைத் தாங்குகின்றது. காற்று அடைக்கப்படாத மோட்டார் சக்கர ரப்பருக்கு மோட்டாரைத் தாங்க எப்படி முடியாதோ அதுபோல காற்று அடைக்கப்படாத குரல் வளையோடு கூடிய மார்பு பளுவைச் சுமக்கமுடியாது. இவற்றைக் கொண்டே நாம், பளுவைச் சுமக்கத்தக்க பலத்தைத் தருவது காற்றே என்பதை நிச்சயமாகத் தெரிந்து கொள்ளலாம்.

நம் நாட்டில் இத்தகைய சுவாசபந்தனமாகிய பிராணாயாமம் செய்து பலத்தை யடைந்த பெரியார்களில் முதன்மையாயினோர் ஆஞ்சநேயரும், பீமன் என்பவருமே. இவ்விருவர்களும் பெரிய பாரமுள்ள மலைகளையும், செடிகளையும் பிடுங்கினார்கள் என்பதை நாம் நூல்களால் உணர்கிறோம். அவை காற்றின் பலத்தினாலேயே நிகழ்ந்தன. இவர்கள் காற்றைச் சாதனத்தால் தம் வசப்படுத்திக் கொண்டவர்கள் ஆகையால் உலகில் நிகரற்ற பலசாலிகளென்று கூறும் பாக்கியத்தைப் பெற்றார்கள். அன்றியும் சம்பூர்ண வாய்வு பந்தம் செய்யும் சாதனத்தை அடைந்திருந்த காரணத்தினாலேயே இவர்கள் வாயுவின் புத்திரர்கள் என்றும் கூறப்பெற்றார்கள். இதனால் பலசாலிகள் என்று கூறப்பெற்றவர்கள் யாவரும் பிராணாயாமம் என்னும் சாதனத்தையே செய்தவர்கள் என்று உணர்தல் வேண்டும்.

நம்நாட்டுச் சித்தவைத்திய சாஸ்திரங்களிலும், மற்றுமுள்ள வேத இதிகாசங்களிலும் கூறியுள்ளபடி நமக்கு ஆயுளானது சுவாசமே என்று தெரிகின்றது. சித்த நூல் 21600 சுவாசம் கொண்டது 1 நாள் என்றும், இப்படி 30 நாள் கொண்டது 1 மாதம் என்றும், 12 மாதம் கொண்டது 1 வருஷமென்றும், மேற்படி 100 வருஷம் கொண்டது 1 புருஷ ஆயுள் என்றும் கூறுகின்றது. அதன்படி கணக்கெடுக்கும் பக்ஷத்தில் நிமிஷம் ஒன்றுக்கு 15 சுவாசம் நாம் விடுவதாக ஏற்படுகின்றது. தற்காலத்திய மேல்நாட்டு முறைப்படி அதாவது (ரெஸ்பரேஷன்) என்று சொல்லும் விதிப்படி சாதாரண மனிதன் 18 முதல் 20 சுவாசம் வரை நிமிஷம் ஒன்றுக்கு விடுவதாகச் சிலர் கணக்கெடுத்திருக்கின்றனர். இதைக்கொண்டு தற்காலத்திய மனிதர்களின் சுவாசம், முற்காலத்திய மனிதர்களுடைய சுவாசத்தைக் காட்டிலும் நிமிடம் ஒன்றுக்கு 5 சுவாசம் அதிகரித்ததாயிருப்பதாகத் தெரியவருகின்றது. இக்கணக்கின்படி இக்காலத்தவர்களின் வயதும் 75 ஆக நிர்ணயிக்கவேண்டியிருக்கிறது. அதிலும் நோய்களினாலும், ஸ்திரீபோகங்களினாலும், ஔடதப் பிரயோகங்களினாலும், இன்னும் பலவித காரணங்களினாலும் நம்முடைய சுவாசமானது அளவுக்குமீறி வெளிப்போவதால் நியமமின்றிய மரணங்கள் சம்பவிக்கின்றன. ஆனால், இக்காலத்திலும் 100 வயதிற்கு மேற்பட்டு உயிர்வாழக் கூடியவர்கள் சிலர் இருக்கின்றார்கள்; இவர்கள் அப்படியிருப்பதற்குக் காரணமென்னவென்று சிலர் கேட்கலாம். அத்தகையார்களின் சுவாசம் நிமிஷம் ஒன்றுக்கு 15க்குக் குறைவாகவே இருக்கும்.

இன்னும் அகாலமரணங்களுக்கும் சுவாசபந்தக் குறைவே காரணமாகின்றது; அதைப்பற்றிச் சொல்லவேண்டிய காரணங்கள் பல இருக்கின்றன; அவற்றையும் எழுதின் வியாசம் மிக விரிவெய்துமாதலாலும், இனி எடுத்த விஷயத்தைப் பூர்த்திசெய்யவேண்டியது அவசியமாதலாலும் அவற்றைவிடுத்துப் பிராணயாம அப்பியாசத்தைப்பற்றிக் கூறி முடிப்பாம்.

சித்தநூல்படி 21600 சுவாசமே ஒருநாள் என்றும், அதன்படி 365 நாட்களே ஒருவருஷம் என்றும், இப்படி 100 வருஷம் கொண்டதே நம்முடைய ஆயுள் என்றும், முன்சொல்லிய கணக்கின்படி நிமிடம் ஒன்றுக்கு 15 சுவாஸத்தை விட்டுவருவோமாகில் நூறுவருஷம் ஜீவிக்கமுடியுமென்றும், மேற்கூறியவற்றால் உணர்ந்திருக்கிறோம். இப்படி நிமிடம் ஒன்றுக்கு 15 வீதம் விடும் சுவாஸத்தைப் பிராணாயாமம் என்னும் சாதனத்தால் கிரமமாய் நாளடைவில் நிமிடம் ஒன்றுக்கு 12, 10, 8, 6, 4, 2, 1 ஆகவும், 2 நிமிடத்திற்கு 1 சுவாச வீதமும் விட்டுப்பழகச் சாதனம் செய்துகொள்ளுவோமானால் நம்முடைய வாழ்நாளானது நீடித்து இருக்குமென்பதில் என்ன ஆட்சேபனை இருக்கிறது.

பிராணாயாமம் செய்வதினால் நீடித்து உயிர் வாழ்வது மன்றிச் சூட்சும புத்தியுடனும், சரீரபலத்துடனும், நோயில்லாமலும் வாழச் சாத்தியமாகும்; அவ்வாறு நீடித்து வாழ சாத்தியப்படுவதால் காய (உடல்) சித்தி ஏற்படுகின்றது. உடல் சித்தியும் மனத்தூய்மையும் எங்கு உண்டாகின்றனவோ அங்கு உயிரின் முத்திக்குவேண்டிய சாதனமும், சாத்தியமும் ஏற்படுகின்றன.

இத்தகைய காரணங்களினாலேயே ஒவ்வொருவரும் தினப்படி சர்வ சாதாரணமாகப் பிராணாயாமம் முதலிய சாதனங்களைச் செய்யவேண்டுமென்றும், அப்படிச் செய்யத் தவறியவர்களைப் பாதகர்களென்றும், சண்டாளர்களென்றும் பெரியோர் கூறியுள்ளார்கள். ஆகையால் இதைக் கண்ணுறாவும் சகலரும், அடியிற் குறிக்கப்பட்டிருக்கும் சாதனமாகிய பிராணாயாம முறையை அப்பியாசிப்பதோடு தங்கள் நண்பர், சகோதரர், சகோதரிகள், புத்திரர்கள், புத்திரிகள் முதலியவர்களையும் அப்பியசிக்கச் செய்யவேண்டுகின்றோம்.

பிராணாயாமம் செய்யும் விதம்:—

பிராணாயாமம் செய்வதில், சுவாசக்குழாய், இருதயம், மூளை இவைகளுக்குப் பலம் உண்டாகும். மூளையின் பலத்தாலேயே சர்வபாகங்களுக்கும் உணர்ச்சி உண்டாய் இருதயம் நடை முதல் சகலகாரியங்களும் நிகழ்ந்துகொண்டிருப்பதால், மூளையையும், இருதயத்தையும், சுவாசக்குழாய்களையும் அதிக ஜாக்கிரதையாய்க் காத்துக்கொள்ளவேண்டியது அவசியமாம்.

மூளையானது மனம், புத்தி இவைகளுக்கு ஆதாரமானது; எல்லா நரம்புகளுக்கும், இரத்தக்குழாய்களுக்கும் ஆதாரமானது.

இனி பிராணாயாமம் செய்யும்போது அநுஷ்டிக்கவேண்டிய விதிகளைக் கூறுவாம்:—

பிராணாயாமம் செய்ய ஆரம்பிக்கும்போது சுவாசத்தை நிதானமாய் இழுத்துக் கொஞ்சபாகம் சுவாசக்குழாயில் தங்கும்படி செய்து, மீதிச் சுவாசத்தை வெளிப்படுத்தவேண்டும்.

பிராணாயாமம் செய்ய ஆரம்பிக்கும்போது வடதிசைநோக்கி உட்கார்ந்து பதுமாசனம் அல்லது சுகாசனத்தி லமர்ந்து, கழுத்து, முதுகு, சிரம் ஆகியவை நேரே அமைய,



1. இந்தப் பிளாக்கில் கண்டபடி வலது கைப் பெருவிரலால் வலது நாசியை மூடி இடது நாசியின் துவாரமூலமாகச் சுவாசத்தை மெதுவாக இழுக்கவேண்டும். அப்படி இழுக்கும்போது $3\frac{1}{2}$ மாத்திரை அளவுடன்கூடிய வாக்கியமாகிய பிரணவ மந்திரத்தை (ஓம்) என்பதை மனதால் 8 முறை தியானித்து அது வரையில் இழுத்துப் பிறகு,



2. இந்தப் பிளாக்கில் கண்டபடி மோதிர விரலால் இடது நாசியையும் மூடிச் சுவாசத்தைத் தடுத்துக்கொண்டு (ஓம் சோகங்) என்னும் மந்திரத்தை 16 முறை தியானித்துப் பிறகு.



3. இந்தப் பிளாக்கில் கண்டபடி வலது நாசியின்மேல் வைத்திருக்கும் பெருவிரலை நீக்கிச் சுவாசத்தை வெளிப்படுத்தவேண்டும். அப்படி வெளிப்படுத்தும் காலத்தில் முதல் சொல்லியபடி 8 முறை பிரணவ மந்திரத்தைத் தியானித்து அதுவரையில் சுவாசத்தை மெதுவாய் விடவேண்டும். இதுவே முதல் முதல் பிராணாயாமம் செய்யத் தொடங்குபவர்கள் செய்யவேண்டிய முதல் விதி. இவ்விதிப்படி சுவாசத்தைத் தடுத்துப் பழகும் பழக்கத்தைக் கிரமமாக (ஓம் சோகங்) என்னும் மந்திரத்தை 16 லிருந்து 24 முறை தியானிக்கும் வரையில் தடுத்து உட்கார்ந்திருக்க அப்யசிக்கவேண்டும். இப்படிச் சுமார் 6 மாதகாலம் பழக

வேண்டும், பின்னர் சுவாசத்தை 128 முறை (ஓம் சோகங்) என்னும் மந்திரத்தைச் சொல்லும்வரை நிறுத்தப் பழகல் வேண்டும். இதன்படி பழக ஆரம்பிக்குங்காலத்தில் சுமார் 6 மாதகாலம் வரையில் சுவாசத்தை 10 நிமிஷத்திற்கு மேல் அடக்கும் பழக்கம் செய்யக்கூடாது. 6 மாதத்திற்குப் பிறகு கிரமமாக விருத்தி பண்ணிக்கொள்ளலாம். சுமார் 1 வருஷம் பிராணயாமத்தில் பழகிய பிறகு ஒவ்வொரு 6 மாதத்திற்கு 5 நிமிஷநேரம் கூட்டிச் சுவாசத்தை யடக்கிப் பழகும் பழக்கத்தைச் செய்யலாம்.

இப்படிக்கின்றி ஒருவர் தம் மிஷ்டப்படி சுவாசத்தை யடக்க ஆரம்பிப்பது அவருடைய உயிருக்கு அபாயந் தருவதாகும்.

பிராணயாமம் செய்யுங்காலத்தில் அடியிற்காணும் ஆகார விதிகளையும் கவனித்துக்கொள்ளவேண்டும்: சர்க்கரை, பால்சாதம், கீரை தினுசுகள், பழம், பால், பூரி, அல்வா, கிழங்குகள், காய்கள், குளிர்ந்தசலம், இளநீர் கேழ்வரகு முதலிய இவைகள் மாத்திரம் சாப்பிடல் வேண்டும்; இவற்றிலும் வயிற்றில் 2 பாகம் நிறைய ஆகாரத்தை உட்கொண்டு ஒருபாகத்தை வாயு தங்குவதற்காக விட்டுவிடல் வேண்டும்.

குடும்பத்திலுள்ளவர்கள், அதாவது மணஞ் செய்துகொண்ட நாயக நாயகிகள் பிராணயாமத்தின் பொருட்டுக் கவனிக்கவேண்டிய சில முக்கிய விதிகள் உண்டு. அவர்கள் சம்போகம் செய்ய விரும்பினால் பெண் மாதவிடாயான காலத்திற்குப் பிறகு 6-ம் 8-ம் 10-ம் 16-ம் நாட்களே ஆலிங்கனத்திற்கு உரித்தானவையாதலின் அந்நாட்களிலேயே அதைச் செய்துகொள்ள வேண்டும். அவ்வாறு ஆலிங்கனம் செய்துகொள்ளும் புருடனும், பெண்ணும் ஆலிங்கனகாலத்திற்கு முன்னும் பின்னும் 6-மணி நேரத்திற்குள் பிராணயாமம் செய்யக்கூடாது. இன்னும் ஆலிங்கனம் செய்ய இச்சையுள்ளவர்கள், தங்களுடைய நாசியிலிருந்துவரும் சுவாசமானது (பிங்கலை நாடி) வலது நாசியில் வந்துகொண்டிருக்கும் காலத்தில் தான் சம்போகிக்க வேண்டும்.

பிராணயாமம் செய்யப் பழகுகின்றவர்கள் தங்களது சுவாசத்தை எப்போதும் அதற்கெனப் பகவானால் அமைக்கப்பட்டுள்ள நாசியின் மூலமாகவே இழுத்தலும், விடுத்தலும் ஆகிய காரியங்களைச் செய்துவரவேண்டும். மறந்தும் வாயால் சுவாசத்தை விடுதல் இழுத்தலாகிய காரியங்களைச் செய்யக்கூடாது. மேற்கூறிய விதிகளுக்கு மாறாய் ஒருபோதும் நடக்கலாகாது. பிராணயாம மந்திரங்களில், சுவாசத்தை யடக்கும்போது உச்சரிக்கும் மந்திரமாகிய 'ஓம்சோகங்' என்னும் மந்திரமே யாவற்றினும் சிறந்தது. இதன் விபரம் அடுத்த சஞ்சிகையில் வெளியிடப்படும்.

குறிப்பு:—முன் காலத்தில் பீமன் முதல் பிராணயாமம் செய்துவந்தவர்களிற் பலரும் மாமிசபட்சணம் செய்தவர்களாய் இருந்தார்களே என்று சிலர் கேட்கக்கூடும். மாமிசம் சாப்பிடுகிறவர்களும் பிராணயாமம் செய்யலாம். என்றாலும் சாப்பிடாதது நல்லது என்பதே எமது துணிபு. இதனால் மாமிசம் சாப்பிடுகிறவர்கள் பிராணயாமம் செய்ய உரிமைப் பட்டவர்களல்லர் என்று சொன்னதாக நினைத்தல் கூடாது.

(தொடரும்) மே. மாசிலாமணி முதலியார், டாக்டர்.

# அறிஞரின் அமுதமொழிகள்.

(181-ம் பக்கத் தொடர்ச்சி)

114. A truly great man never puts away the simplicity of a child. *Chinese Proverb.*

உண்மையான பெரியமனிதன் டாம்பீகமற்ற வாழ்க்கையையே கொள்கிறான். (சீனதேசத்துப் பழமொழி.)

115. By sacrifice, and not by arms Napoleon was defeated.

நெபோலியன் படைகளால் தோற்கடிக்கப்படவில்லை; தியாகத்தால்தான் தோற்கடிக்கப்பட்டான்.

116. God grants liberty only to those who love it, and are always ready to guard and defend it.

சுதந்திரத்தை விரும்புகிறவர்களுக்கும், அதைக் காப்பாற்றக்கூடியவர்களுக்கும்தான் கடவுள் அதைக் கொடுக்கிறார்.

117. Beware of the Weak. For the tears of the Weak undermine the throne of Kings. *Mahabharatha.*

ஏழைகளைக் கவனித்துநட; ஏழைகளுடைய கண்ணீர் இராஜ்ஜியங்களையும் அழித்துவிடும். (ஏழை அழுத கண்ணீர் கூரிய வாளொக்கும்) (மகாபாரதம்.)

118. Our actions make or mar us. We are the children of our own deeds. *Victor Hugo.*

நம்முடைய விருத்திக்கும் தாழ்ச்சிக்குங் காரணம் நம் செயல்களேயாம். நம்முடைய சொந்த செயல்களின் குழந்தைகளாய் நாமிருக்கிறோம். (விக்டர் யூகோ)

119. Choose an author as you choose a friend. *Dillon.*

நண்பனைத் தெரிந்தெடுப்பதைப்போல் நூலாசிரியனையும் தேர்ந்தெடு (அதாவது நல்ல புத்தகங்களைக் கைக்கொள்). (டில்லன்)

120. Make few acquaintances. *Rothschild.*

ஒரு சிலரையே அறிமுகப்படுத்திக்கொள். (ராத்ஸ்சைல்ட்.)

121. To bear is to conquer. *T. Campbell.*

பொறுத்துக்கொள்வது வெற்றி யடைவதாகும். (டி. காம்பேல்.)

122. The good is always beautiful, the beautiful good. *Whittier.*

நல்லது எப்போதும் அழகாயிருக்கிறது; அழகாயிருப்பது எப்போதும் நல்லதாகவே யிருக்கிறது. (விட்டியர்.)

(தொடரும்.)

**A. P. இராமன், B. A.**




## கிருஷ்ணஸிங் அல்லது துப்பறியும் சீடன்

(188-ம் பக்கத் தொடர்ச்சி.)

**ஆனந்தஸிங்:**—திடீரென்று நீர் இறந்துபோனால், உமது புத்திரிக்குப் பூட்டின இரகசியத்தைக் கூறாதிருந்தால், பெட்டியை யார் திறப்பார்கள்?

**உலகநாதன்:**—அதற்குத்தக்க ஏற்பாடு செய்திருக்கிறேன்.

**ஆனந்:**—எப்படி?

உலக:—என்மனைவி ஒரு இரும்புப்பெட்டியை வைத்துக்கொண்டிருக்கிறாள். என் பெட்டியின் இரகசியத்தை விபரமாய் எழுதி, சீல் செய்து அவள் பெட்டியில் வைத்திருக்கிறேன்.

ஆனந்:—தங்கள் மனைவிக்கு ஏன் இந்த இரகசியத்தைக் கூறவில்லை?

உலக:—ஏனெனில் அவள் என் பெட்டியைத் திறக்கவேண்டிய சந்தர்ப்பமேயில்லை. அதுவுமன்றி அவளிடம் கூறினாலும் அவள் அதை மறந்துவிடுவாள். இதுவுமன்றி அந்த இரகசியத்தை வேறொரு கடிதத்திலெழுதி என் இன்னொரு இரும்புப்பெட்டியில் மறைவிடத்தில் வைத்திருக்கிறேன். அது யாருக்குமே தெரியாது. நான் இறந்தபின் தக்க அதிகாரி யாவும் சோதிக்கும்போதுதான் அது அகப்படும்.

ஆனந்:—தங்கள் மனைவியின் பெட்டியாவது அதில் தாங்கள் வைத்திருக்கும் சீல் செய்த கடிதமாவது கள்ளத்தனமாய்த் திறக்கப்பட்டிருக்கிறதாவென்று சோதனை செய்தீரா?

உலக:—இல்லை.

ஆனந்:—நான் தங்கள் வீட்டிற்கு வருகிறவரையில் ஒருவரும் எதையும் தொடாதபடி ஜாக்கிரதையாய்ப் பார்த்துக்கொள்ளும்.

அம்மொழிகளைக் கேட்டதே உலகநாதம் பிள்ளை மிக்க சந்தோஷத்தோடும் ஆவலோடும், "ஹா! அப்படியானால் நீர் என் விவகாரத்தை ஏற்றுக்கொள்கிறீரல்லவா? என் குமாரத்தியைக் கண்டுபிடித்து விடுவீரல்லவா?" என்று கேட்டார்.

ஆனந்:—தடையின்றிக் கண்டுபிடித்து உம்மிடம் ஒப்புவிக்கிறேன்.

உலகநாதன் மிக்க சந்தோஷத்தோடு "அய்யா! இவ்வாக்களித்ததற்காகத் தங்களுக்குக் கோடிவந்தன மளிக்கிறேன். தங்களுக்கு என்ன கொடுப்பதென்பதைபற்றி நான் கூறவும் மாட்டேன். பேரம் செய்யவும் மாட்டேன். விவகாரம் முடிந்ததே தாங்களே கேளும். அதற்கு எவ்வித மாறு சொல்லும் நான் கூறமாட்டேன். தாங்கள் எப்போது என் வீட்டிற்குவருவீர்?" என்றார்.

ஆனந்:—உடனே வருவேன். இத்தகைய விஷயங்களில் ஒரு வினாடி ஆலசியமும் பெருமோசமாய் விடும். நான் இன்னும் அரைமணி நேரத்தில் அங்கு வருவேன். நான் உம்முடைய மனைவியிடமும் பொக்கிஷதாரனிடமும் பேசவேண்டும். அவன் பெயரென்ன?

உலக:—இராஜவேல்.

ஆனந்:—இனி யுன் புத்திரியின் புகைப்படத்தை யென்னிடம் கொடுத்து விட்டுப்போம். உமது மனைவியின் பெட்டி இதற்கிடையில் திறக்கப் படாதிருந்தால் நான் வருமட்டும் திறக்காதபடி பார்த்துக்கொள்ளும். இப்போது நமக்குள் நடந்த சங்கதி உமது மனைவிக்கேனும் இராஜ வேலுக்கேனும் வேறுயாருக்கேனும் எள்ளளவுகூடத் தெரியலாகாது. என்னைத் தவிர வேறுயாரையும் நம்பாதே. நான் உன்கரத்தைப்பற்றி இம்மாதிரி குறி காட்டுகிற மட்டும் என் உருவத்தையும் நம்பாதே. இக் குறி காட்டினல் அதைக்காட்டும் உருவம் ஆணுயினும் பெண்ணுயினும் வாலிபனுயினும் வயோதிகனுயினும், எந்த உருவமாயினுஞ்சரி, அது நானே யென்று சத்தியமாய் நம்பிக்கொள். பணக்கார உருவமாயினும் பிச்சைக்கார உருவமாயினும் இக்குறி காட்டினல் நானே யென்பது நிச்சயம்.

உலக:—ஆயினும் என்னைப்போலவே என்மனைவியும், இராஜவேலும் என் புத்திரியின்மேல் நிரம்ப அன்புடையவர்கள். அவர்களிருவரும் துயரக் கடலில் அமிழ்ந்து கிடக்கிருர்கள்.

ஆனந்:—இருக்கும். அதைப்பற்றி நான் எள்ளளவும் சந்தேகிக்கவில்லை. ஆயி னும் ஒரு இரகசியம் இருவருக்குத் தெரிந்துவிட்டால் அப்புறம் அது இரகசியமல்ல. ஒரு துப்பறியுமாளை அமர்த்தியதாய் மட்டும் வேண்டு மாகுல் கூறும். பத்திரம் நாம் பேசியவற்றில் ஒருவார்த்தை யாரிட மேனும் கூறிவிட்டீரோ பிறகு நான் எதற்கும் ஜவாப்தாரியல்ல. இனிப் போய்வாரும்.

உலகநாதர் சென்றதே கிருஷ்ணஸிங் தன் புத்திரனிடம் வந்தான். புத்திரன் "என் அப்பா..." என்பதற்குள் தந்தை மிக்க மனகிழ்ச்சியோடு,

"பேஷ் பேஷ்! வெகு நேர்த்தி, விவகாரத்தை மிக்க சாதுர்யத்தோடு கையாடிஞய். உன் சாமார்த்தியத்தை முதல் முதல் பிரசித்தப் படுத்துவதற் குத் தகுதியான கேஸை நீயே கண்டுபிடித்துக் கொண்டாய். இதில் ஏதோ பெரிய மர்ம மிருக்கிறதென்பது உண்மையே. இதைப்பற்றி யுன்னுடைய தீர்மானமென்ன?" வென்ருன்.

ஆனந்:—இன்னும் தீர்மான மெதுவும் ஏற்படவில்லை. இதற்குச் சாவி அந்த வீட்டிலேயே யிருக்கிறதென்பதே யென் பிரதம தீர்மானம்.

கிருஷ்:—ஆம். அது உண்மையே யென்று நானும் கருதுகிறேன். மாறு வேடத்தை மாற்றிக்கொள்ளப் போகிருயோ?

ஆனந்:—இல்லை. தந்தையே! தங்கள் உருவத்தைக் கொஞ்சகாலம் எனக்கு இரவலாயளித்து விட்டுத் தாங்கள் வெளியில் யார் கண்களுக்கும் புலப் படாமல் வீட்டிலேயே யிருக்கப் பிரார்த்திக்கிறேன்.

கிருஷ்ணஸிங் புன்னகையோடு "ஆ திருட்டுப்பயலே" என்று தன் மைந் தனை யன்போடும் பெருமையோடுந் தோள்மேல் தட்டி "உன் கருத்தை யறிந்துகொண்டேன். உன் முதல் கேஸை யென் உதவியின்றியே நடத்தக் கருதுகிருய். அது குற்றமென்று நான் கருதவில்லை. என் கௌரவத்தை யிம் மாதிரி யுன்னிடம் அளிக்க நான் சற்றேனும் பயப்படவுமில்லை. நீ யுன் சிறு வயதிலிருந்து ஒரு விஷயத்திலேயே நல்ல பயிற்சியடைந்து வந்திருக்கிருய். இத்தகைய தொழிலில் முதல் முதல் பிரவேசித்தவர்களில் எவனும் உன் போல் பூரணப் பயிற்சியடைந்திருக்க மாட்டான். நீ பூரணஜெயமடைவாய். இனி சீக்கிரம் புறப்படு" என்ருன்.

(தொடரும்) ஆரணி. குப்புசாமி முதலியார்.




(1) ஒரு நாடகக் கொட்டகையில் சிலர், இராமாயணத்தை மிக விமரிசையாக நடத்திக் காட்டினார்கள். அக்காட்சியில் இராமரைப் பரதன் கண்டு, அயோத்திக்குவந்து சேரும்படி பலவகையிலும் அழுதுபுலம்பி அழைத்தான். இராமர், "தந்தையின் வாக்கியத்தை நிறைவேற்றுவதுதான் எனது கடன்" என்று கூறி வரமறுத்தார். பரதன், "அண்ணா! தங்களுடைய பாதரட்சையையாகிலும் கொடுங்கள்; அதைச் சிம்மாசனத்தில் வைத்து, தங்கள் பெயரால் அரசுபுரிந்து வருகிறேன்" என்று கூறினான். இராமர் மனமிசைந்து தம்பாதுகையைக் கொடுக்கவும், பரதன் அதைப்பெற்றுத் தன் தலைமீது வைத்துக் கொண்டு இராமரைப் பிரிய மனமில்லாமல் பிரிந்து, அயோத்தியை நோக்கி நான்கு அடி எடுத்துவைத்தான். திடீரென அவன் மீண்டும் ஓடிவந்து இராமரைக் கட்டிப்பிடித்துக் கொண்டு, "தங்களை எப்படிப் பிரிவேன் அண்ணா!" என்று அழுதுபுலம்பினான். இக்காட்சியைக்கண்ட அனைவரும், மயிர்க் கூச்சிட்டு, சோகரசம் ததும்ப, கண்களில் நீரைத் தாரை, தாரையாக வடித்தனர். அப்போது வேடிக்கைபார்த்துக்கொண்டிருந்த ஒருவன் திடீரென மேடைமீது ஏறி, பரதன் வேடம்பூண்ட மனிதனை நோக்கி "தம்பி இருளப்பா! உன் கூடப்பிறந்த என்னை நீ கொலைசெய்துவிடுவதாக இரண்டுமணி நேரத்திற்கு முன்பு வீட்டில் கர்ஜித்து வந்தாயே! அதற்குள் உனக்கு இவ்வளவு சகோதர பக்தி எப்படியப்பா உண்டாயிற்று?" என வினவினானாம்.

* * *

(2) "வாருங்கள் சேஷய்யரே! ஏது தாங்கள் காந்தி கட்சியில் சேர்ந்துவிட்டீர்களோ? கதர் உடை பலமாயிருக்கிறதே" என்று ஒருவன் தன்வீட்டிற்கு வந்த ஒருவரைக் கேட்டான். அதற்கு சேஷய்யர், "இல்லை, பிள்ளையவாள்! காந்திகட்சி என்ன? கீந்திகட்சி என்ன? எனக்கு நம்முடைய தேசத்துப் பணம் அன்னிய நாட்டிற்குப் போகக்கூடாது என்ற எண்ணமே தவிர, வேறொன்றுமில்லை" என்றார் "தங்களுக்கு எவ்வளவு நாளாய் இந்த நன்னோக்கம்" என்று அவன் கேட்டான். "நான் இரண்டு மாதமாகத்தான் கதராடை உடுத்துகிறேன். வீட்டில் ஆத்துக்காரி, பிள்ளை குட்டிகள், வேலைக்காரி எல்லாரும் கதர் உடைதான் உடுத்துகிறார்கள்; வேணுமானால் வந்து பாருங்கள்" என்று ஐயர் கூறினார். அதற்கு அம்மனிதன், "சரிசரி! ரொம்ப திருப்தி. தங்களுக்கு இருப்பதுபோன்ற தேசபக்தி இந்நாட்டு மக்கள் அனைவருக்கும் இருந்துவிட்டால்,...... ......" என்று கூறிக்கொண்டே வாயிற்படியில் நிற்கின்ற மோட்டார்காரைப் பார்த்துவிட்டு, "ஏது ஐயரவாள்! கார் புதிதாய் இருக்கிறதே, யாருடையது?" என்று கேட்டான் அதற்கு ஐயர்:—"நேற்று மாலையில் தான் ரூபாய் 4700க்கு அதை வாங்கினேன். மோட்டார் நன்றாயிருக்கிறதா?" எனக் கூறினாராம்.

* * *

(3) வர்ணத்தாள்களை விற்பவர்களும், வளைவி விற்பவர்களும், சேலை விற்பவர்களும் இந்திய நாடக வீரர் திரு. ஸி. கன்னையா கம்பெனியாருக்கு வாழ்த்துக் கூறுகிறார்களாம். காரணம் என்னவெனில், வர்ணக் கடிதங்களுக்கு "தசாவதாரக் கடிதம்" என்றும், வர்ண வளைவிகளுக்கு "தசாதார வளைவி" என்றும் வர்ணச் சேலைகளுக்கு 'தசாவதாரச் சேலை' யென்றும் பெயர்வைத்ததில், அவைகள் அதிகமாக செலவு ஆகின்றனவாம்.

## சந்தாதாரர்களுக்கு அறிவிப்பு.

நமது போதினிக்கு இந்த 13-வது ஆண்டுக்கு முன் பண மனுப்பிச் சேர்ந்த புதிய சந்தாதாரர்களுக்கு மட்டும் இனிச் சந்தா நம்பர் மாறிவரும். நண்பர்கள் அந்த நம்பரைக் கவனித்து வைத்துக்கொள்க.

## வர்த்தமானக் குறிப்புகள்.

**ஓர் அற்புத மஹான்:**—இராமநாதபுரம் ஜில்லா, சாயல்குடி தாலுகா பெருநாளி என்னும் கிராமத்தில் கொண்டயங்கொட்டை மறவர் குலத்தில் 30-வயதுள்ள ஒருவர் இருக்கிறார். ஷை மஹான் சாப்பிடுகிறதில்லை; உட்கார்ந்திருக்கிறார்; எழுந்திருந்து நடையாடுவது கிடையாது; மலபாதை ஜல பாதை முதலியனவும் இல்லை திறந்தகண் திறந்தபடியே இருக்கிறது. இவர் மூன்று வருஷகாலமாக இப்படி இருக்கிறார். இவர் பெயர் கோவிந்தசாமி என்று இவரைத்தெரிந்தவர்கள் சொல்லுகிறார்கள். தேள், பாம்பு முதலிய விஷஜந்துக்கள் கடித்தால் கோவிந்தசாமி ஆணைப்படிக்கு விஷம் ஏறாதே" என்றால் விஷம் இறங்கி, சொஸ்தமாகிவிடுகிறதாம். இது இந்தக் கலிகாலத்தில் விநோதமாகவே இருக்கிறது. * * *

**மிஸ் மேக்டோனல்ட்:**—ஆப்ரிக்காவில் கிலிமான் ஜரோ என்ற பர்வதம் ஒன்று இருக்கின்றது; இதன் உயரம் 19, 321 அடி. இந்த மலையின் உச்சியைக் கண்டவர்கள் இதுவரையில் நான்குபேரே. பெண்மக்களில் முதன் முதலாக இம்மலையின் உச்சிவரையில் தொத்திச் சென்றவள் மிஸ் மேக்டோனல்ட். இவள் லண்டன்மாநகரைச் சேர்ந்தவள். இவளுக்கு இப்போது 22-வயது ஆகிறது; உயரமாயும், தேகக்கட்டுடனும் விளங்குகிறாள். இவள் தனக்குப் பன்னிரண்டு வயது ஆரம்பித்தது முதற்கொண்டே ஸ்காட்லாண்ட், ஸ்விட்ஸர்லாந்து ஆகிய இப்பிரதேசங்களிலுள்ள மலைகளில் ஏறப் பிரயத்தனஞ்செய்து வெற்றி யுற்றாள். * *

**கடலை நீந்திய பெண்:**—மிஸ் மெர்சிடிஸ்கி லெயிட்சஸ் என்ற பெண் சென்ற அக்டோபர்மீ 7உ இங்கிலாந்துக்கும் பிரான்சுக்கும் இடையிலுள்ள 'இங்கிலீஷ் சானல்' என்ற கடலை நீந்தினாள். இவள் இதற்குமுன் அக்கடலை நீந்த ஏழுமுறை பிரயத்தனஞ் செய்துள்ளாள் இவள் கேப். கிரிஸ் நெஸ் என்ற இடத்தில் நீந்த ஆரம்பித்து, போக்ஸ்டோன் என்ற இடத்தில் வந்து நின்றாள். அங்ஙனம் நீந்துவதற்கு $15\frac{1}{4}$ மணிநேரமாயிற்று; நீந்தும்போது பனியும் குளிரும் அபரிமிதமாயிருந்தன; கரையைச் சேர்ந்தபோது அவள் பாதிப் பிரக்ஞையுடன் இருந்தாள். * * *

**இயந்திர மனிதன்:**—இயந்திரத்தாலே மனிதன் செய்து அவன் மூலமாகக் காரியங்களை நடத்தக் காரல்காபெக் எண்ணியது இப்போது அநுபவத்தில் வந்துகொண்டிருக்கிறது. வெஸ்டிங் ஹவுஸ் எலெக்டிரிக் கம்பெனியார் 'இயந்திர மனிதன்' என்னும் ஒருவகை மனித உருவத்தைத் தயாரித்திருக்கிறார்கள். அவ்வுருவம் கேள்விகளுக்குப் பதிலளிப்பதுடன் சொல்கிறபடியும் காரியங்களைச் செய்கின்றனவாம் இங்ஙனம் செய்யப்பட்ட மனிதன் 'ஓபன் சீசேம்' என்று சொன்னால் கதவைத் திறக்கிறானாம். இதே மாதிரியான இன்னொரு மனிதன் விளக்குகளைக் கொளுத்தினானாம்; எலெக்டிரிக் விசிறியை ஆடும்படி செய்தானாம்; 'சர்க்லெட்' என்னும் ஒளிவிளக்கைப் பற்றிய விஷயங்களையும் இன்னுமிவைபோன்ற பிறவிஷயங்களையும் கவனித்தானாம்; இங்ஙனம் வைக்கப்பட்டுள்ள இயந்திர மனிதர்கள் வெஸ்டிங் அவுஸ் தேக்கங்களிலுள்ள தண்ணீரையும் அளவிட்டுச் சொல்லக்கூடியவர்களாயிருக்கிறார்களாம். * *

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

**பிரபவ௵ மார்கழி௴—கலியுகாதி 5029, சாலிவாகனம் 1850,**
**பசலி 1337—கொல்லமாண்டு 1103—ஹிஜிரி 1346,**
**இங்கிலீஷ் 1927௵ டிசம்பர்௴—ஜனவரி௴**

| மார்கழி | டிசம்பர் | வாரம். | திதி. | நக்ஷத்திரம். | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 16 | வெ | அ30-20 | உத்45-55 | சி45-55அ | திஸ்ரோவ்ஷ்டகா, ஷடசீதி புண்யகாலம் |
| 2 | 17 | சனி | நவ36-10 | அஸ்52-43 | மர60 | திஸ்ரோவ்ஷ்டகா |
| 3 | 18 | ஞா | தச42-38 | சித்60 | சித்60 | வியாதியஸ்தர் குளிக்க |
| 4 | 19 | திங் | ஏகா49-13 | சித்0-40 | பி0-40அ | சர்வ மத்வ ஏகாதசி |
| 5 | 20 | செவ் | து55-18 | சுவா8-13 | சி8-13ம | விதைவிதைக்க, கதிரறுக்க |
| 6 | 21 | புத | திர60 | விசா15-8 | சித்60 | பிரதோஷம், கரிநாள் |
| 7 | 22 | வியா | திர0-33 | அனு21-20 | சி21-29பி | மாசசிவராத்திரி |
| 8 | 23 | வெ | ச●4-53 | கேட்26-25 | ம26-25அ | சர்வத்திர அமாவாசை |
| 9 | 24 | சனி | அ7-58 | மூல30-15 | சித்60 | |
| 10 | 25 | ஞா | பிர9-40 | பூரா33 0 | சி33-0அ | |
| 11 | 26 | திங் | துதி10-13 | உத்34-33 | ம34-33அ | |
| 12 | 27 | செவ் | திரி8-23 | திரு35-0 | சித்60 | |
| 13 | 28 | புத | சது9-0 | அவி34-35 | பி34-35சி | |
| 14 | 29 | வியா | பஞ்5-30 | சதை33-13 | ம33-13சி | |
| 15 | 30 | வெ | சஷ்2-10<br>சப்58-3 | பூரட்31-3 | சித்60 | |
| 16 | 31 | சனி | அஷ்53-5 | உத்28-8 | சி28-8ம | |
| 17 | 1 | ஞா | நவ47-43 | ரேவ24-43 | அ24-43சி | |
| 18 | 2 | திங் | தச41-50 | அஸ்20-38 | சித்60 | அவமாகம் ஆபரணம் பூண |
| 19 | 3 | செவ் | ஏகா35-40 | ப✻16-20 | சித்60 | கிருத்திகை, வைதண்ட ஏகாதசி, சர்வ, மத்வ ஏகாதசி |
| 20 | ஜனவரி 4 | புத | து29-23 | கிரு11-48 | அ11-48சி | பிரதோஷம், கூர்மதுவா |
| 21 | 5 | வியா | திர23-15 | ரோ7-23 | மர60 | பிரயாணம் விலக்க [தசி |
| 22 | 6 | வெ | ச○17-38 | மிரு3-15<br>திரு59-43 | சித்60 | பௌர்ணமி, அவமாகம், ஸ்ரீநடராஜர் அபிஷேகம், ஆருத்திரா தரிசனம் |
| 23 | 7 | சனி | பவு12-33 | புன57-8 | சித்60 | தானியம் செலவிட |
| 24 | 8 | ஞா | பிர8-38 | பூசம்55-43 | சித்60 | பரசுராம ஜயந்தி |
| 25 | 9 | திங் | துதி5-58 | ஆயி55-45 | சி55-45ம | நவக்கிரகசாந்திசெய்ய |
| 26 | 10 | செவ் | திரி4-53 | மக57-33 | சித்60 | குளம் கிணறு வெட்ட |
| 27 | 11 | புத | சது5-23 | பூரம்60 | அமி60 | சித்திரம் எழுத |
| 28 | 12 | வியா | பஞ்7-43 | பூரம்1-5 | சி1-5ம | சுபகாரியங்கள் விலக்க |
| 29 | 13 | வெ | சஷ்11-43 | உத்6-13 | சி6-13அ | திஸ்ரோவ்ஷ்டகா, போகி பண்டிகை |

| | | | |
|---|---|---|---|
| குரு | | ராகு | |
| | 9௳ தனு-புத<br>13 ,, விரு-சுக்<br>25 ,, தனு-செ<br>28 ,, மகர-புத | | |
| சூரி | செ-ச<br>பு-கே | சுக் | |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR,
AT THE "ANANDA BODHINI" POWER PRESS,
15, VENKATESA MAISTRY ST., MADRAS.